உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப் பத்திரிகை.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.


தொகுதி-௩௰] ஆங்கீரஸ ஹூ ஆடிமீ [பகுதி-௯.

Vol. XXX. *July-August-1932.* No. 9.


உள்ளுறை.




பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ. 4 | [தனிப்பிரதி அணா—8.
வெளிநாடுகளுக்கு ரூ. 4—8—0.

1932.

Printed by Srimathu Raja M Dinakara Bahadur Avl, and published by Thiru. Narayana Iyengar, at the Tamil Sangam Power Press, No. 54, New Jail Road, Madura.

# ஒரு வேண்டுகோள்.

---

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதமொருமுறை வெளிவரும் இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிடுமாறு பொருளுரைகளும், மதிப்புரைவேண்டிப் புத்தகம் முதலியனவும் அனுப்புவோர் அவற்றைப் பத்திராதிபர், செந்தமிழ், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும்,

செந்தமிழில் வெளியிடுமாறு அனுப்பும் விளம்பரங்களையும் பாண்டியன்புத்தகசாலைக்கு நன்கொடையாக அனுப்பும் புத்தகம் முதலியவைகளையும், செந்தமிழ் செந்தமிழ்ப்பிரசுரங்கள் தமிழ்ச்சங்கப் பிரசுரங்கள் சங்கக்கலாசாலை சங்கப்பரீக்ஷைகள் முதலியவைசம்பந்தமாக அனுப்பும் கடிதங்கள் மணியார்டர்கள் முதலியவற்றையும், இன்னும் இச்சங்கசம்பந்தமாயறியவிரும்பியெழுதும் பிறவற்றையும் மானேஜர், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும் அனுப்புமாறு இதன்மூலம் கேட்டுக்கொள்ளலாயிற்று.

மதுரைத்தமிழ்ச்சங்கம்,
மதுரை.

லக்ஷ்மீநாராயணையர்,
மானேஜர்.

---

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩௰] ஆங்கிரஸ௵ ஆடி௴ [பகுதி-௯.

Vol. XXX. July-August-1932. No. 9.

## யவனமஞ்சரி.

### அரிஸ்தாதில் எழுதிய ஒழுக்கநூல்

[௨௱௮-ம் பக்கத்தொடர்ச்சி.]

### பத்தாம் பாகம்.

### இன்பத்தின் ஆராய்ச்சியும் சந்தோஷத்தின் ஆராய்ச்சியும்.

#### முதலதிகாரம். இன்பத்தைப்பற்றிய ஆராய்ச்சி அவசியம்.

மக்கள் இயல்பாகவே இன்பம்விழைபவராதலால், ஒழுக்கத்தை ஆராயும்போது இன்பத்தை ஒருங்கு ஆராய்தல் பயனுடைத்து. இன்பம் மனிதவியற்கையுடன் நெருங்கிய தொடர்புடையதாகலான், இன்ப துன்பத்தைக் கருவியாகக்கொண்டே கல்வி கற்பிக்கிறோம். அறன் வழிநிற்போர் இன்புறவேண்டியவற்றில் இன்புற்றும் வெறுக்கவேண்டியவற்றை வெறுத்தும் பழகவேண்டும். இன்பதுன்பங்களே ஒழுக்கத்திற்குக் காரணம். இப் பிரதானமான விஷயத்தில் அபிப்பிராயபேதம் உளவாகையால், முறையாக ஆராய்வோம்.

சிலர் நன்மையே இன்பம் என்றும், சிலர் இன்பம் யாண்டும் தீதென்றும் கூறுவர். நல்லொழுக்கத்தில் மக்களைத் தூண்டுதற்குப் புலனொடுக்கம் நல்லதெனநினைத்துச் சிலர் புலன்வழிச்சேறல் தீதென வற்புறுத்துவர். சிலர் இன்பம் தீதென்பது தமது உண்மையான உள்ளக்கிடக்கையாகையால், இன்பம்விழைதல் தீயொழுக்கமெனத் தம்

மதம் நாட்டுவர். இக்கொள்கையர் "ஞானோபதேசம்செய்வதினும் அறஞ் செய்தலே பிரதான"மென்பதை உணர்ந்தவராவர். சிற்சிலர் யாதோ நிமித்தமாக, நல்லொழுக்க உபதேசஞ்செய்து அதன்பின் தம்முபதேசத் திற்கு மாறானவற்றைச் செய்வர். இவ்வாறு ஒழுகுவோருரைக்கு ஒருவரும் செவிகொடார். எந்நேரமும் உண்மைபேசுவது நன்று. விவேகி பிரசங்கம்செய்யும்போது தான் பற்றக்கூடிய கொள்கைகளையே எடுத்துமொழிவன்.

2-ம் அதிகாரம். இன்பம் நல்லது.

பகுத்தறிவுள்ள மனிதரும் பகுத்தறிவில்லாப் பிராணிகளும் இன்பம் விழைவதால் இன்பம் நல்லதென்றார் யுடோக்சஸ். விரும்பப்படு வன நன்மை; விரும்பப்படுவனவற்றுள் யாது திறமானதோ, அதே மகாநன்மை. எல்லாப்பிராணிகளும் இன்பம்விழைதலால், இன்பமே மகாநன்மை. எல்லாராலும் விழையப்படுவதும் எல்லாருக்கும் நன்மை யானதுமே மகாநன்மை.

யுடோக்சஸ் நல்லொழுக்கத்திற் சிறந்தவராகலின், சாதாரண மனிதர் இவரது நியாயங்களை உற்றுநோக்கி ஆலோசித்துத் தெரிந்து தெளியாது ஏற்பர். யுடோக்சஸ் வேறுமோர் நியாயம் கூறினார். துன் பத்தை எல்லாரும் வெறுக்கின்றார்கள்; ஆகையால் துன்பத்தின் விரோத மாகிய இன்பம் எல்லாராலும் வேண்டப்படும். இன்பம் உலக நன்மை களில் ஒன்றாயினும் அது மேம்பாடுடைய பரமநன்மை. இன்பத்திற்கு இன்பமே நிமித்தமொழிய வேறு நிமித்தமின்றாகையால், இன்பம் பூரண நன்மை, யாது நிமித்தமில்லாமல் விரும்பப்படுவதோ அது தொடர் பில்லாத பரமநன்மை. இன்பம் இன்பத்திற்காகவே விழையப்படும்; ஆகையால் இன்பமே ஒப்பற்ற பரமநன்மை.

யுடோக்சஸ் இன்னமும் ஓர் ஏது மொழிவர். ஒரு நன்மை அநு பவிக்கப்படும்போது இன்பம் உடன்நிகழுமாயின், அந்நன்மை பெரு நன்மையாகக் கொள்ளப்படும். நன்மையே நன்மையொடுசேர்ந்து நன்மை யைப் பெருக்குவதொழிய, ஒரு நன்மையுடன் ஒரு தீமை சேர்ந்து நன்மையாகாது. நன்மையாகாதபோது பெருநன்மையாவது யாங்ஙனம்? இங்ஙனம் இன்பம் எந்நன்மையுடனும் சேர்ந்து நன்மையாவதால்,

இன்பம் பெருநன்மை என்பர். யுடோக்சஸின் அநுமானத்தை ஆராய் வாம்.

மேற்கூறிய அநுமானத்தான் அறியக்கிடப்பது: இன்பம் ஒரு நன்மை என்பதொழிய வேறில்லை; இன்பம் மகாநன்மை அன்றென்ப தேனும் இன்பம் மகாநன்மை என்பதேனும் பெறப்படவில்லை. இனி, பிளேற்ரோ இதுபோன்ற போலிநியாயத்தால் இன்பம் தீயதென அநுமிப்பர். ஞானத்தின் கூட்டரவில்லா இன்பவாழ்க்கையினும் ஞானத்தின்வழியொழுகும் இன்பவாழ்க்கை போற்றப்படும். ஞான மாகிய ஒரு நன்மையும் இன்பமாகிய ஒரு நன்மையும் சேர்ந்து ஒரு மகாநன்மை பிறப்பதால், இன்பம் தனித்து ஒரு மகாநன்மையாகாது. எவற்றைச்சேர்த்தாலும் திறம் திறத்தினும் திறமாகாது.

இனி எல்லாராலும் விரும்பப்படுவதாகிய இன்பத்தை நன்மையன் றென்பார்கூற்றுப் பயனில்சொல். சரியென்பது எல்லாராலும் ஒத்துக் கொள்ளப்படுவதே. பலரை நம்பாதே, என்னை நம்பு என்பவரை யாம் எப்படி நம்பலாம்.

யுடோக்சஸ் என்பவர்க்கு மாறுனகொள்கையோர் பின்வருமாறு சொல்வர். "துன்பம் தீதாயினும் இன்பம் நல்லதெனப் பெறப்படாது. இவ்விரண்டும் மாறுகோளல்ல. இவ்விரண்டும் வேறென்றற்கு மாறு கோளாதல்கூடும்". இது தர்க்கமுறையாயினும் பொருட்குற்ற முடைத்து. இன்ப துன்பம் வெறுக்கப்படும் தீமையாயின் இரண்டும் விலக்கப்படும். இரண்டும் நன்மையாயின் இரண்டும் விழைபப்படும். ஆனால் மனிதர் இன்பத்தை விரும்புவதும் துன்பத்தை விலக்குவதும் காண்டலாற் பெறப்படும். ஆகையால் இன்பமும் துன்பமும் மாறு கோளானவை. துன்பம் வெறுக்கப்படுவதாகையால் அதன் இகலாகிய இன்பம் நன்மையெனப்படும்.

பெரும்பாலும் விரும்பப்படும் இன்பத்தை எல்லாரும் விரும்ப வேண்டிய நன்மையென்பது குற்றமென்பர் தற்காலத்து மனநூலாரும் ஒழுக்கநூலாரும். பெரும்பாலும் இன்பம் விரும்பப்படுவதால் இன்பம் நன்மை என்பது பிழை.

## 3-ம். அதிகாரம். இன்பம் ஒரு நிலைமாறுதல் அன்று.

இன்பம் ஒரு குணமாகையால் அது நன்மையன்றென்பர். மேலும் நன்மை மிகுவதும் குறைவதும் மில்லாமலிருக்க, இன்பம் மிகுவதும் குறைவதுமாகையால் இன்பம் நன்மையன்றென வாதிப்பர். ஆனால் குணங்களும் நிலைகளும் அல்லாதனவும் மிகுவதும் குறைவதும் உண்டென்பதை அறிக. அறநிலையும் சந்தோஷநிலையும் மாறுத லில்லாநிலையாயினும், இவற்றினும் மனிதர் ஒருவரினும்பார்க்க ஒருவர் மிகுதலும் குறைதலு முண்டு. தேகசுகம் நிலைமாறுவதுபோல இன்ப மும் நிலைமாறுகின்றது. நிலைமாறினும் இன்பம் நன்மையாதல் கூடும்.

சிலர் நிலைமாறுதல் யாண்டும் கூடாதென்றும் இன்பம் ஒரு நிலை மாறுதல் என்றும் வாதிப்பர். ஈண்டு இன்பம் நிலைமாறுதலன்றென் பதைக் காட்டுதும். நன்மை என்பது வரையறை அறியப்பட்ட முடி வுடைப்பொருள். இன்பத்தின் தன்மை ஒரு மெய்ப்பாட்டின் தன்மை போல் வரையறையில்லாததும் முடிவில்லாததும். நிலைமாறுதல் என் னும் அசைவும் புடைபெயர்ச்சியும் ஒருபொருட்கிளவி. இனி நிலை மாறுதலும் முற்றுநிலையும் மாறுகோளானவை. முற்றுநிலை ஒரு நன்மை யைக் குறிப்பதாய் நல்லதாயின் நிலைமாறுதல் தீமையைக் குறிக்கும். இன்பம் ஒரு நிலைமாறுதல், ஆகையால் தீமை: எனும் இம் மதம் குற்ற முடைத்து. நிலைமாறுதல் என்பதென்ன? நிலைமாறுதல் கெதியாயே னும் மெதுவாயேனும் நிகழும். வேகம் தனிப்பொருளில் ஒப்புநோக் காதபோது சுயவேகமாயிருக்கும். இதைச் சுத்தவேக மெனினும் ஒக்கும். ஒப்புநோக்கி வேகத்தைக் குறைந்தவேகம் மிகுந்தவேகம் என்பேம். இது தொடர்புடைய வேகம்.

இன்பம் என்னும் நிலைமாறுதலில் சுயவேகமுமில்லை; தொடர்புடைய வேகமு மில்லை. குறித்தநோத்து நிகழும் இன்பம் கெதியாய் நிலைமாறு கிறதென்றும் மெதுவாய் நிலைமாறுகிறதென்றும் மொழிவாரை அறியேம். இன்பம் ஒரு மெய்ப்பாட்டுநிலை. ஒரு மெய்ப்பாட்டுநிலை வேறோர் மெய்ப் பாட்டுநிலையாகும்போது ஒரு மாற்றமுண்டு. ஆனல் ஒரு தனிமெய்ப் பாட்டுநிலையில் நிலைமாறுதலில்லை. இன்பநிலை தொடக்கமுதல் முடியும் வரையும் ஒரேதன்மையானநிலையாகவே இருக்கும். இன்பநிலை நொது

மல்நிலையாகித் துன்பநிலையாக மாறுதலுண்டு. இங்ஙனம் இன்பம் நிலை மாறுதல் என்னும் புடைபெயர்ச்சி அன்றென்பதை விளக்கினும்.

சிலர், இன்பம் சாதாரணநிலையில் மிகுதலும் துன்பம் சாதாரண நிலையிற் குறைதலும் என்பர். இம் மிகுதலும் குறைதலும் சடப் பொருட்குணங்கள். உடம்பினது குறைவை நிரப்புதலே இன்பம். ஊன் உண்ணும்போது ஒருகுறைவு நிரப்பப்படும். இவ்வின்பங்களை ஐம்புலன்களில் இழிவான ஊறு சுவை முதலிய புலன்களால் அநுபவிக்கிறோம். புலவின்பம் போற்றப்படாதது. சிலர்க்குமாத்திரம் இன்பமாய்த்தோன்றுவது இன்பமன்று; இன்பம் நல்லதாயின் யாவர்க்கும் இன்பமாய்த்தோன்றவேண்டும். செங்கமாரி இனத்தைச் சேர்ந்த ஒரு நோயால் வருந்துபவனுக்கு எல்லாப்பொருள்களும் மஞ்சள்நிறமாகத் தோற்றும். விடயித்தபொருள் மஞ்சள்நிறமில்லாததாயிருத்தலால், அவனது காட்சி குற்றமுடைத்து. இங்ஙனம் சிற்றின்பத்தைப் பேரின்பமென மக்கள் பெரும்பாலும் மயங்குவர்.

நற்செயலால் விளையும் இன்பம் ஒன்று; தீச்செயலால் விளையும் இன்பம் ஒன்று. ஒன்றில் இன்புற்றுப் பழகியவனுக்கு அது இன்பமாய்த்தோன்றும். இசையின்பமில்லாதவன் சங்கீதத்தின் இனிமையை எவ்வாறறிவன்! ஒவ்வொருவரும் தாம் பழகிய இன்பமே இன்பம் என்பர். குழந்தைகள் இன்புறும் பொருள்களையெல்லாம் உனக்கு அளிக்கிறேன், நீ அவற்றில் யாண்டும் இன்புறுவாயாக என்றால் ஒருவரும் சம்மதியார். இன்பத்திற் பலவகையுண்டென்பது வெள்ளிடைமலைபோல்விளங்கும். இன்பம்விளையாதசெயல்களும் உண்டு. கண்ணிந்திரியத்தைத் தொழிற்படுத்தும்போது யாண்டும் ஒருவன் இன்புறுகின்றனல்லன். சிந்தித்தல், விடயித்தல், ஆலோசித்தல், தெரிதல் முதலியவற்றில் இன்பம் இல்லை. ஒருவகை இன்பம் உண்டெனினும், அவ்வின்பம்நோக்கி அச்செயல்களைச் செய்யேம். செவியாற் கேட்கும் போதெல்லாம் இசையின்பம் பெறுகிறோமா? இல்லை. கன்மேந்திரியம் தொழிற்படும்போது பெரும்பாலும் இன்பம் விளையாது. இது காறும் ஆராய்ந்தவற்றால் அறியப்பட்டவை: சில இன்பம் விரும்பப் படுவன அல்ல; இன்பங்களிற் சில உற்பத்திநோக்கி நல்லவை, சில தீயவை; ஐம்புலவின்பத்திலும் பகுத்தறிவின் இன்பம் மேன்மையானது என்பன.

### 4-ம் அதிகாரம். இன்பத்தின் இலக்கணம்.

இன்பத்தின் தன்மை யென்ன? அதன் சொரூபம் யாது? இன்பம் ஒரு முடிவு; அம்முடிவு குறைவில்லாதது. ஒரு இன்பம் மற்றொரு இன்பத்திலும் குறைவாய்த்தோன்றும்போது எவ்வளவு நேரத்தைக் கூட்டினாலும் அக்குறைவு நிரம்பிக் குறைவில்லாத இன்பமாகாது. இன்பம் அசைவுமன்று, புடைபெயர்ச்சியுமன்று, நிலைமாறுதலுமன்று. அசைவு காலம்வேண்டிநிற்கும். அசைவு நோக்கமுடைத்து. வீடு கட்டப்படும்போது ஒரு நிலைமாறுதலை அறிகிறோம். கட்டப்பட்டபின் நோக்கம் அறியப்படும். ஒருவன் நடத்தல்செய்யும்போது, அசைவு வேகமுடையது, நோக்கமுடையது, காலம்வேண்டிநிற்பது. இன்பம், காலம் வேகம் நோக்கமில்லாதது. இன்பம் நிலைமாறுதல் என்னும் அசைவன்று. முற்றுநிலை. ஒரு கணப்பொழுதில் ஒரு இன்பத்தின் தன்மையை ஆராய்ந்து உணரலாம். சுருங்கச்சொல்லின் இன்பம் அவயவப்பகுப்புடையதன்று.

ஒவ்வொரு இந்திரியமும் விடயிக்கும்போது தம் முன்னிலைப் பொருள்களை முழுதும் விடயிக்கும். இக்காண்டல் இன்பமுடைத்து. இங்ஙனம் பகுத்தறிவைப் பயிற்சிபண்ணும்போது சிந்தனைக்காட்சிகளும் மானதக்காட்சிகளும் தோன்றும். ஞாதுரு (சேதனன்) ஞேயத்தை விடயிக்கும்போது இன்பம் விளையும். விடயித்தல்இன்பமும் பயிற்சிப்பட்ட சக்தியின் இன்பமும் வேறு. சித்தாகிய ஆன்மா வாயிற்காட்சிகளை விடயித்து ஐம்புலன்களை உற்சாகத்தோடு தொழிற்படுத்தும். வாலிபப்பருவத்தில் வாயிற்காட்சிகள் ஐயந் திரிபு இல்லனவாய் அழகுடைத்தாயிருக்கும். எப்பொழுதும் ஒரு சக்தியைப் பயிற்சிபண்ண முடியாது. மனிதசக்தி எதுவும் இளைப்படையுந்தன்மைத்து. எல்லாரும் இன்பவாழ்க்கையை விரும்புவதால் இன்பத்தை நாடுகிறோம். ஒவ்வொருவரும் தமக்குப் பிரியமானசக்திகளைப் பயிற்சிசெய்து இன்புறுவர். வாழ்வதற்காக இன்பத்தை விரும்புகிறோமோ என்றும் இன்பம் விழைவதற்காக வாழ்க்கையை விரும்புகிறோமோ என்றும் ஆசங்கை நிகழும். இவை இரண்டும் ஒன்றை ஒன்று பற்றிநிற்பதால் ஆராயாது விடுவேம்.

### 5-ம் அதிகாரம். இன்பம் பலதிறப்படும்.

இயற்கைப்பொருள்கள் மரம் புல் பூண்டு மிருகம் எனப் பலசாதியாதல்போலச் செயற்கைப்பொருள்களும் சித்திரம் சிற்பம் முதலிய கலைஞானப்பொருள்களாய்க் குடம் படம் மாளிகை வீடு எனப் பலவகைப்படும். தத்துவங்களும் இருவகைப்படுதலால், இன்பமும் தத்துவத்தின் முயற்சியாதலால் இருவகைப்படும். கணிதத்தில் வல்லுநர் கணிதத்திலும் சங்கீதத்தில் வல்லுநர் சங்கீதத்திலும் மகிழ்வர். ஒரு தத்துவப்பயிற்சியில் இன்புறும்போது மற்றொரு தத்துவப்பயிற்சியில் இன்புறவியலாது. யாழ் வாசிக்கும்போது தருக்கத்தில் நியாயத்தை நோக்குதல் கஷ்டம். ஒரு இன்பம் மற்றொரு இன்பத்தைத் தடைசெய்யும். நாடகம் நடிக்கப்படும்பொழுது நடித்தல் நன்றாயிராத அமயங்களில் அவையோர் இனிப்பருந்துவார்கள். எழுதும்போது அம்முயற்சியின் களைப்பால் எழுதாது இருப்பேம். வேறு இன்பத்தின் தடையாலும் எழுதுவதை நிறுத்துவேம். இன்புறுதல் உணர்தல் சிந்தித்தல் ஐயப்படுதல் முதலியவற்றின் வேறு. இன்புறுதலும் உணர்தலும் ஓரேநேரத்தில் நிகழும்போது இன்புறுதலே உணர்தல் என மயங்குவேம்.

இனி, சத்திகள் ஒன்றினும் ஒன்று திறமாவதுபோல இன்பங்களும் ஒன்றில் ஒன்று நன்மையாகின்றன. ஐம்புலவின்பத்தில் ஒரு புலவின்பம் ஒரு புலவின்பத்திலும் திறனாகின்றது. ஊற்றினும் சுவையும், சுவையினும் நாற்றமும், நாற்றத்தினும் ஓசையும், ஓசையினும் ஒளியுமென ஒன்றினும் ஒன்று தூயதாகின்றது. இவ்வண்ணமே புத்திதத்துவத்தின் இன்பமாகிய பகுத்தறிவின் இன்பம் மெய்ப்பாட்டுத்தத்துவத்தின் இன்பமாகிய ஐம்புலவின்பத்திலும் மேம்பட்டது. குதிரையின் இன்பமும் நாயின் இன்பமும் மனிதனின் இன்பமும் பேதமுடையன. கெறுக்கிளீற்றஸ் சொல்வதுபோல "கழுதை பொன்னினும் வைக்கோலையே நாடும்." ஒருவனுக்கு இன்பமானது வேறொருவனுக்குத் துன்பமாய்த்தோன்றினும் தோன்றும். ஒருவனுக்கே ஒருநேரத்தில் இன்பமானது வேறொருநேரத்தில் துன்பமாகின்றது. தேகம் சுகமாயிருக்கும்போது இனிமையானது சுகவீனதசையில் கைப்பாகத்தோன்றும், இங்ஙனமாயின் இனிமை என்பது என்ன? யாருடையவாக்கியுற்

உண்மை? குற்றமில்லாத பூரணமனிதன் எதை இனிதென்பானே அதே இனிது. நல்லொழுக்கமுடைய சான்றோர்க்கு யாது இன்பமோ அதே உண்மையான இன்பம். இஃதுணராதார் தாம் விரும்பிச் செய்வதே இன்பமென மயங்குவர்.

இன்பவாராய்ச்சி முற்றிற்று.

எஞ்சிய அதிகாரங்களால் ஆராய்ச்சியின்முடிபு கூறப்படும்.

## 6-ம் அதிகாரம். சந்தோஷத்தின் இலக்கணம்.

இதுகாறும் அறம், அன்பு, இன்பம் முதலியவற்றை ஆராய்ந்தோம். சந்தோஷத்தின் சொரூபம் அறிவதற்காகவே இவ்வாராய்ச்சிசெய்தோம். சந்தோஷம் ஒரு பயிற்சியோ? பயிற்சியாயின் ஆயுள்முழுவதும் துயின்று அதன்பின் சொற்பநாளில் பழகத்தக்கதாயிருக்கும். துக்கத்தில் அமிழ்ந்திருப்பவனும் பயிற்சியால் சந்தோஷநிலையடையலாமோ? சந்தோஷம் ஒருகுறைவுமில்லாதநிலை. ஒரு மகாநோக்கத்தைப் பயிற்சியின் இன்பங்கருதியேனும் பயிற்சியின் மேன்மைகருதியேனும் பற்றுவேம். பொழுதுபோக்கும் இன்பங்களையே கொடுங்கோல்மன்னர்விழைதலால், அவர்களின் சந்தோஷம் குற்றமுடைத்து. அவர் மேன்மை உணராமல் புலவின்பத்திலேயே காலத்தைப் போக்குவர். குழந்தைகளும் தாம் இன்புறும் பொருள்களே சிறமானவையென நினைந்து இன்புறுவர். குற்றமில்லாத சான்றோரின்பயிற்சிகளே பேரின்பம் பயப்பன. அவை அறஞ்செய்யும் நல்லொழுக்கப்பயிற்சிகள். பொழுதுபோக்குவது மக்களின் மகாநோக்கமாகாது; என்னை? ஆயுள்முழுவதும் நாம் வருந்துவது இதற்காகவா? எவ்வெப்பொருளையும் வேறோர்பொருளுக்காகவே தேடுகிறோம். ஒருநோக்கம் வேறோர் மகாநோக்கத்தில் அடங்குமென்றோம். சந்தோஷம் ஒன்றுமே சந்தோஷத்திற்காக விரும்பப்படுவது. சந்தோஷத்திற்கு நிமித்தமின்றாகலான் சந்தோஷமே மகாநன்மை, வேண்டிய இன்பங்களெல்லாம் ஒருங்கிருப்பதே சந்தோஷநிலை.

மகிழ்ந்திருத்தல் இளைத்த கன்மேந்திரிய நரம்புகளை உற்சாகப்படுத்துவதற்கே. இளைப்பை ஆற்றுதல் பின்னர் முயற்சிசெய்வதற்காகவே. உள்ளமகிழ்ச்சி பொழுதுபோக்குதல் முதலியன தொடர்புடைய உலக இன்பங்கள், மேன்மையான சத்தியே பேரின்பத்தைப்

பயக்குமாகலால், ஐம்புலவின்பம் சந்தோஷமன்று. அடிமை முதலிய கீழ்மக்கள் புலன்வழிச்சேறலால் அது சிற்றின்பம். இன்பங்களின் திறன் ஆராய்ந்து ஒவ்வொன்றிலும் அவ்வளவின் மகிழ்ந்து பேரின்பத்தில் இன்புறும்நிலையே சந்தோஷம். இம்மைச்சீவியத்தில் இன்புறுவதே சந்தோஷம்.

## 7-ம் அதிகாரம். பதிஞானப்பயிற்சியே சந்தோஷம்.

தத்துவங்களின் மேன்மையானது புத்தியாகையால், புத்தியின் தொழிலாகிய சிந்தித்தல் சந்தோஷத்தை விளைப்பது. இதைத் தியான மென்பர். தியானம் முடிவில்லாதது. தியானத்திற்கு வரையறையில்லை. ஞானப்பயிற்சி இன்பங்களிற் சிறந்தது. தத்துவஞானமே சிறந்த ஞானம். ஞானி ஒருவனே சிநேகிதர் இல்லாவிடினும் சந்தோஷமாயிருக்கக்கூடியவன். தியானத்திற்கு இம்மைப்பயனின்மையால் தியானமே தியானத்தின் நோக்கம். தியானம் பயிற்சியும் பயனுமாயிருப்பதை உணர்க. தியானஞ்செய்வோர் வாளாவிருந்து ஒன்றிலே ஏகாக்கிரஞ்செய்தல்வேண்டும். தியானமே சந்தோஷமாகையால் அரசியல் விஷயங்களிற் காலங்கழிப்பது சந்தோஷமன்று. யுத்தத்திற் சுறுசுறுப்பாயிருத்தல்வேண்டும். அரசியல்விஷயத்திற் சுறுசுறுப்பாயிருத்தல் வேண்டும். மேலும், அரசர் அமைச்சர் ஒற்றர் முதலியோர் நோக்கங்கருதி முயற்சிசெய்வாராகையால், அவர்முயற்சி சந்தோஷமன்று. வாளாவிருந்து புத்திதத்துவத்திற் செய்யப்படும் தியானமே தெய்வத்தன்மையது. புத்திதத்துவமொன்றுமே மற்றைய தத்துவமெல்லாவற்றையும் அதிட்டிப்பது. புத்தியே ஆன்மாவின் சொரூபம். ஞானப்பயிற்சியே ஆனந்தநிலை; அதே வீட்டின்பம்.

## 8-ம் அதிகாரம். தியானமும் சந்தோஷமும்.

நல்லொழுக்கத்திற் பயில்வது சந்தோஷத்தைப் பயக்கும். அறஞ்செய்தல் மனிதச்செயலொழியத் தெய்வச்செயலன்று. தெய்வவுலகில் ஒழுக்கமே இல்லை; நல்லொழுக்கமும் தீயொழுக்கமும் எனப் பாகுபாடும் இல்லை; நன்மையுமில்லை; தீமையுமில்லை; சரியுமில்லை; பிழையுமில்லை. ஒழுக்கம் மோகத்தோடும் விவேகத்தோடும் தொடர்புடைத்தாகலான் சந்தோஷமும் ஒழுக்குடைத்து. இம்மையில் சந்தோஷத்திற்குப் புறநன்மைகளாகிய செல்வம் சிநேகம் முதலியன வேண்டப்படும்,

தியானத்திற்கோ இப் புறநன்மைகள் தேவைப்படா. தெய்வங்களே தியானநிலையிலிருப்பன. அப்போது தேவர் செய்யும் முயற்சி என்ன? நீதிச்செயல்களா? வியாபாரஞ்செய்பவரைக்குறித்து நீதியானநிலையின்படி பண்டங்களை விற்பனவுசெய்யப்பண்ணுகிறார்களா? அற்றேல் தேவர்கள் வீரச்செயல்செய்துகொண்டிருக்கிறார்களா? அற்றேல் கொடை அளிக்கிறார்களா? அவர் யாருக்குக் கொடையளிப்பது? அவருக்குச் செல்வம் யாண்டையது? எவ்வகைச்செயல்களும் இழுக்குடைத்தாகலால் தெய்வங்கள் செயலற்றிருப்பவர்களா? தேவர் சேதனப்பொருள்களாகையால் ஏதோ ஒருசெயல் செய்யவேண்டும். திங்களில்வசிக்கும் எண்டிமியனைப்போல் துயில்கின்றார்களா? இக் கடாவிடைகளால் அறியக்கிடப்பன: "கடவுள் நிர்க்குணன். செயலற்றிருக்கும் தேவர் தியானம் என்னும் ஒரேசெயல்மாத்திரம் செய்வர். இம் முயற்சி ஒன்றுமே சந்தோஷத்தைவிளைப்பது. விலங்குகள் இச் சந்தோஷநிலையை அடையமாட்டா. மக்கள் தியானநிலைக்கேற்ற சந்தோஷமடைவர்" என்பனவாம்.

நாம் மனிதர்களாகையால் புறநன்மைகளாகிய செல்வம் முதலியவற்றை வேண்டுவேம். தியானஞ்செய்வதற்குத் தேகாரோக்கியம் இன்றியமையாததாகையால் உணவும் வேண்டப்படும். சோலன் என்னும் ஞானி "அத்தியாவசியமாகியபொருள்களைத்தேடிச் சீவித்து அறஞ்செய்வோரே சந்தோஷநிலையிலிருப்பர்" என்றார். அனச்சக்கோறஸ் "சந்தோஷமுடையான் அரசனுமல்லன், செல்வனுமல்லன், சாதாரண மனிதனே." என்பர். இவ்வுரைகளை அநுபவத்தில் ஆராய்ந்து சரியாகிற் கொள்க. இனித் தெய்வங்கள் மனிதர்க்கு உதவிசெய்வாராயின் நல்லோர்க்கே உதவிபுரிவார். தியானஞ்செய்யும் ஞானிகட்கே அதிக உதவிசெய்வார். இதனாலும் ஞானி சந்தோஷமடைவான்.

## 9-ம். அதிகாரம். சந்தோஷத்தை எவ்வாறு அடையலாம்.

மகாபோக்கம் என்னவென ஆராய்ந்து அதைச் சந்தோஷமென நிச்சயித்தோம். இவ்வறிவு சந்தோஷமன்று. போக்கம் அறிந்தபின் அதன்வழி ஒழுகுதலே சந்தோஷம். ஒழுக்கநூல்களைக் கற்றும், மேன்மையான அபிப்பிராயங்களைக் கேட்டும், கொள்கைகளை ஆராய்ந்து தெளிந்தும்; வாலிபர் அநுபவமடைந்து நல்வழிப்படுவர், பொது

சனங்கள் இவ்வண்ணம் நல்வழிப்படார். பாமரர் பாவஞ்செய்யாது புண்ணியஞ்செய்வது நரகத்தின்பயத்தினலேயன்றிப் பக்தியினுலன்று. மக்கள் மோகங்களால் மயக்கப்பட்டுத் தத்தம் இஷ்ட இன்பங்களிற் களித்துக் காலத்தைக் கழிப்பர். பாமரர்க்குக் கொள்கைகளை அநுவயங்களால் உபதேசிப்பதால் பயனில்லை. சிலர் மனிதர் இயற்கையில் நல்லாராய்ப்பிறப்பர் என்பர்; சிலர் மனிதர் பயிற்சியால் நல்லவராவர் என்பர். இனி, கல்வி இயற்கையால் ஆவதும் நல்லொழுக்கம் தெய்வச் செயலால் ஆவதும் என்பர் பலர்.

பயிற்சியால் ஒருவனை நல்வழிப்படுத்தலாம். அது கடினமான முறை. பொதுவாக மேன்மை ஒருவனைத் தூண்டுவதில்லை; அச்சமே; தூண்டுவதாகலின், ஒழுக்கப்பிரமாணங்களை அமைத்து அவ்விதிகளின் வழி இளமைப்பிராயந்தொடங்கி நல்லொழுக்கத்தைப் பயிற்சிபண்ணுதல் அவசியம். ஒழுக்கப்பிரமாணங்களை மீறி ஒழுகும் தூர்த்தரை நாட்டினின்றும் தூரத்திவிடவேண்டும். ஐம்புலவின்பத்தை வெறுக்கத்தக்க மனவலியில்லோரை அளவுகடவாதொழுகப்பண்ணுவதற்குத் துன்ப மூலமாகத் தண்டித்துப் பாரமிழுக்கும் மிருகங்களைச் செலுத்துவது போல நல்வழிப்படுத்தவேண்டும். ஒருவனை அவன் விரும்பும் இன்பத்திற்கு விரோதமான துன்பத்தாற் றண்டித்து நல்வழிப்படுத்துவதே முறை. நிச்சயிக்கப்பட்டசெயலாகவேனும் நிச்சயிக்கப்படாதசெயலாகவேனும் மனிதனைத் தீச்செயல்செய்யாதவாறு பழக்கவேண்டும். பகுத்தறிவின்வழிநிற்போரை இலகுவாய் நன்மக்களாக்கலாம். அரசர் தம்வலியால் பிரசைகளை நல்வழிப்படுத்துவர் அரசனது ஆணைகள் கட்டளைப்பிரமாணங்கள் நீதிப்பிரமாணங்கள் எல்லாம் நீதியாயிருத்தல்வேண்டும். ஒழுக்கப்பிரமாணங்களெல்லாம் விவேகிகளால் ஆக்கப்படவேண்டும். ஸ்பாட்டா என்னும் ஒருதேசத்தில்மாத்திரம் அரசினால் நல்லொழுக்கம் பழக்கப்படுகின்றது. இதர தேசங்களில் இராட்சதர் தமது மனைவி மக்களைத் தம்வலியால் தமக்கு இசைந்தவாறு ஒழுகப்பண்ணுவதுபோல, குடும்பத்தலைவர்களும் குடும்ப அங்கத்தினரை அடக்கித் துன்புறுத்துவர்.

பிரசைகளின் ஒழுக்கப்பயிற்சியை அரசினர் கவனியாவிடின் நாம் எமது சிநேகிதரையும் சுற்றத்தாரையும் நல்வழிப்படுத்தமுயலவேண்டும். பிரமாணங்களெல்லாம் ஏட்டுவழக்கில் இருக்கவேண்டியனவல்ல. பொதுப்பிரமாணங்களிலும் சிறப்பாய் ஒவ்வோர் ஒழுக்கத்தையும் ஆராய்வதே நன்று. ஆதுரனுக்குப் பொதுவாக நித்திரையும் பசியும் சுகத்தைக்கொடுப்பதெனினும், சிலநோயால் வருந்தும்போது பசியிருத்தல் கேட்டைவிளைக்கும். கல்விமுறைகளிலும் குருசிஷ்யமுறையே சிறந்தது. சாஸ்திரக்கல்வி இல்லாதோரும் ஒருவனை நல்வழிப்படுத்தலாம். வைத்தியம் கல்லாதோர் நோயைக் குணப்படுத்துவதைக் காண்கிறோம். நூல் கற்போர் அந்நூலிற் பிரமாணங்களை நன்கு விளங்கக்கற்கவேண்டும். ஒழுக்கப்பிரமாணங்களை யாரிடம் கற்றல் நன்று? அநுபவமுதிர்ந்த சான்றோரிடம் கற்றல் நன்று. சான்றோருடன் வசித்து நற்பழக்கம் பழகவேண்டும்.

நல்லொழுக்கம் போதிப்பவர் நற்செயல்செய்பவரல்லர். சோபிஸ் என்னும் குதர்க்கர் நல்லொழுக்கநூலையும் ஒருசொற்பொழிவுநூலாகக் கொள்வர். பொருணயம் பாராது சொன்னயங்கருதி இரட்டுறமொழிதலில் இன்புறுவர். சோபிஸ் என்போர்க்குத் தத்துவ ஆராய்ச்சி விளங்காமையால், தம் புத்திக் கெட்டியவாறு தத்துவநூல்களுக்கு உரைசெய்வர். இவ்வாறு தாம் நினைந்தவாறு உரைசெய்து பாமரரை ஏமாற்றுவர்.

சாஸ்திரங்களும் நிகண்டுகளும் பிரமாணநூல்களும் பகுத்தறிவுடையோர்க்கே பயன்படுவன. நல்லொழுக்கப்பிரமாணங்களைச் செவ்விதாக முறைவகுத்துப் பிரமாணத்தொகுதி ஒன்று இயற்றுவது அவசியம். எமது முன்னோர் செய்யாமையின், அரசாங்கப்பிரமாணங்கள் எத்தன்மையன என்பதையும் அரசியல்முறை எத்தன்மையதென்பதையும் இயன்ற அளவு ஆராய்ந்து ஒருநூல் ஓதுவேன்.

த. இராமநாதபிள்ளை, B.A.

---

# பரிமேலழகரும் மணக்குடவரும்.

[௧௯௯-ம் பக்கத் தொடர்ச்சி.]

இனி, "படை குடி கூழமைச்சு" என்னுங் குறளைப் பின்பற்றியே தான் போக்கியார்வாக்கு நிகழ்கின்றது; பரிமேலழகர் குடியென்பதை நாட்டையுணர்த்தும் வாசகமாகக் கருதினமைகொண்டு அஃது வள்ளுவ னார்வாக்கொடு மாறுபட்டதாமெனப் புறத்தேவிடுதல் பொருந்தா தெனின், நன்று கூறினாய்; குடியென்ப தீண்டு நாட்டையுணர்த்திலது, குடிகளையே யுணர்த்திற்று எனக் கொள்ளின் அரணைப்பற்றி யிரண்டதி காரங்க ணிகழ்வனவா மெனக் கொள்ள நேரும். போக்கியாரும், 'உருவல் லர ணிரண்டு' எனவே கூறியுள்ளார். அர ணியாதென்றுநோக்கின் அஃது "மணிநீரு மண்ணு மலையு மணிநிழற் காடும்" ஆகிய இவற்றை யுடைய மதிலெனத் தெரியப்படுதலானும், *இவ் வாண்முதலியவற்றை யுடையது நாடாமன்றி நாடு அரணாகாமையானும், நாட்டை யரணென- "அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கு—முள்ளழிக்க லாகா வரண்" எனக் கூறியதுபோலாவது பிறண்டெங்கேனுங் கூறாமையானும், அரணையுணர்த்தவந்த வதிகார மொன்றேயாமென்பது தேற்றமாகிறது.

ஆகையால், பரிமேலழகர் குடியென்பது நாட்டினையுணர்த்திற் றெனக்கொண்டு, அமைச்சு, நாடு, அரண், பொருள்செயல்வகை, படை, நட்பு என முறைப்படுத்தினதே பொருந்துமென்க. போக்கியார்வாக்கு இவ்விடத்தில் வள்ளுவனார்வாக்கொடு மாறுபட்டே நிகழ்கின்றது.

அன்றியும், தொடித்தலைவிழுத்தண்டினார் †'அறிபொருளேழொன்று' எனக் கூறியிருத்தலையும் நோக்குக.

---

* "இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லாணு நாட்டிற் குறுப்பு."

† இவ்விடத்திற் போக்கியார்வாக்கை நினைத்துக்கொண்டு உரையாளர் 'ஏழொன் றென்பதற்கு 'ஏழு' எனப் பொருளெழுதிச் சென்றுவிட்டார்.

சங்கத்துப்போக்கியார் வள்ளுவனார்வாக்கோடுமாறுபாடுறக்கூறுவரா வெனின் அஃது அவர்வாக்கன்றெனக்கொள்ளவோ அவர்வாக்கே பிழைபடவழங்குகின்றதென்னவோ வேண்டவரும் என்க.

[இங்ஙனஞ் சில முரண்பாடுகள் அவ்வள்ளுவமாலைப்பாக்களிற் புலப்படலானன்றோ சில புலவர்கள் அவை சங்கத்தார்வாக்கன்றெனத் தாபிக்கப்புகுந்துள்ளார்கள்.]

அன்றியும், 'குடி' யென்ப தீண்டு நாட்டையுணர்த்தினாற்போலவே, 'கூழ்' என்பதும் பொருளையுணர்த்திநிற்றல் காண்க.

அன்றியும், அப்போக்கியார்கவிக்கு உரையெழுதியவிசாகப்பெருமாளையரவர்கள் இக்காலத்தார் 'படைகுடி' யென்பதை யாதாரமாகக் கொண்டு வேறுபடவுமுரைப்பரென ஆங்கெழுதியிருத்தலையும் நோக்குக.

காமத்துப்பாலை இருவரும் கைகோள்வகையான் இருவகையாகப் பிரித்துள்ளார்கள். சங்கத்தார் கூற்றுவகையான் மூன்றாகப்பிரித்துள்ளார்களென,

"ஆண்பாலே ழாறிரண்டு பெண்பா லடுத்தன்பு
பூண்பா லிருபாலோ ராறாக—மாண்பாய
காமத்தின் பக்கமோரு மூன்றாகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனார் நன்கு." (மோசிகீரனார்)

"அறனறிந் தீரைம் பொருளேழொன்று காமத்
திறமூன் றெனப்பகுதி செய்து—பெறலரிய
நாலு மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார்
போலு மொழிந்த பொருள்." (தொடித்தலைவிழுத்தண்டினார்)

எனவரும் பாக்களாற் புலனாகின்றது.

[தொடரும்.]

இங்ஙனம்,
பண்டித. சித. நாராயணசாமி.

———

# தத்துவப்பிரகாசர்.

தமிழ்நாவலர்சரிதை யென்னும் நூலிலே தத்துவப்பிரகாசர் என்று ஒருவர் பாடியனவாகப் பதின்மூன்றுபாக்கள்[1] காணப்படுகின்றன. இந் நூலை யச்சிட்ட தி. த. கனகசுந்தரம்பிள்ளையவர்கள் இவரைப்பற்றித் தம்குறிப்பாக, 'தத்துவப்பிரகாசர் என்பவர் ஒரு பண்டாரம். முன்னர் வரும் 237-ம்பாட்டுப் பார்க்க' என்றெழுதினார்கள். 237-ம்பாட்டின் மேற்குறிப்பாக, 'தத்துவப்பிரகாச பண்டாரத்துக்கு இலக்கணம்வருமோ என்றபோது பாடியது' என்பது காணப்படுகிறது. இக்குறிப்பை நினைவிற்கொண்டு சரிதைப்பதிப்பாசிரியர் மேற்காட்டிய குறிப்பை வரைந் தனர்போலும்.

தத்துவப்பிரகாசம்[2] என்று ஒருநூலுண்டு. அதன் முகவுரை யிலே "சரியை, கிரியை, யோகம், ஞானமென்னும் நான்கு பாதங்களை யும் அறியவேண்டுவோர் சைவாகமங்களையும், அவற்றின் வழிநூல், சார்புநூல்களையும் கற்றாலன்றி அறியக்கூடாமையானும், அதுவும் ஸம்ஸ்கிருதத்திலும் வல்லார்க்கன்றி ஏனையோர்க்கு முற்றுமறிதல் கூடாமையானும், அவர்க்கு மவையனைத்துங் கற்றுணர மிக்ககாலம் வேண்டுதலானும், எவருமறிதல் அரிதென்பதுநோக்கி, யாவரும் அதனை யறிந்து உண்மைநிலையினின்றும் வீடுபெற்றுய்யுமாறு கருணைகூர்ந்து மெய்கண்டார்சந்ததியிற் பொய்யினையகற்றி மெய்யினைக்கண்ட உத்தம சீலரும், சீகாழியைத் தமக்கு வாசத்தானமாகக்கொண்டவரும் சிற்றம் பலநாடிஞாது சீடருமாகிய ஸ்ரீமத் தத்துவப்பிரகாசசுவாமிகள் முன் னூலின்வழியே சரியைமுத னான்குபாதங்களையும் ஒவ்வொன்றினும் நான்காய்ப் பதினாறுபாதமாக விரித்து முந்நூற்றுமுப்பத்தேழு (337) திருவிருத்தத்தால் தத்துவப்பிரகாச மென்னும், பெயர்தந்து இந்நூலை அருளிச்செய்தார்" என்று அந்நூற்பதிப்பாளர் எழுதியிருக்கின்றனர், வேறு ஒரு குறிப்பும் இவரைப்பற்றிக் காணப்படவில்லை.

---

[1] இப் பதின்மூன்றுபாக்களில் ஒன்று இவர்மேற் பாடப்பட்ட செய்யுளாகும்.

[2] இந்நூல் யாழ்ப்பாணத்தில் வி. கந்தப்பிள்ளையால் (1897-ம்ஆண்டு) ஈர்தனஹேமாசியில் அச்சிடப்பட்டது.

தமிழ்நாவலர்சரிதையிலே காணப்படும் பாக்களை யாராய்வோமானல் இவர் திருவாரூரில் வாழ்ந்தவரென்பதும், அவ்வூரிற் கோயில் கொண்டு எழுந்தருளிய தியாகப்பெருமானது கோயிற்காரியங்களைக்கண்காணித்து வந்தவரென்பதும், சிறந்தவித்துவானென்பதும், ஆளுடையபிள்ளையிடத்து மாருத அன்புபூண்டவரென்பதும், சிவஞானியென்பதும் விளங்கும்.

அந்நூலிலே இவர்பாடிய முதற்பாவாகக் காணப்படுவது,

> மருவுபுகழ்க் கிட்ண மகாராய ராணை
> அரிய [3]வடமலையா னணை—திருவாரூர்ப்
> [4]பாகற் கொடியறுப்பார் பாதந் திருவாணை
> தியாகக் கொடியிறக்கா தே.

என்பதாம்.

இதன் மேற்குறிப்பாகத் திருவாரூர்க்கோடியிறக்காமற் றகைந்தது என்ற தொடர் காணப்படுகிறது. இக்குறிப்பினாலும், வெண்பாவினாலும் இப்பெரியார் திருவாரூர்த் தியாகப்பெருமான்திருவிழா முடிந்த பின்னர் இறக்கப்படவேண்டியகொடியை, இறக்கக்கூடாதென அக்காலத்தாண்ட அரசன்மீதும், அவ்விடத்திருந்த அதிகாரியின்மீதும் தியாகப்பெருமான்மீதும் ஆணையிட்டு நிறுத்தினர் என்று தெரிகிறது. இதற்குக் காரணம், அங்குப் பெருமானுக்கு நடத்தப்படவேண்டிய விழாக்கள் சில சரியாகநடத்தப்படாமையாம்; என ஊகிக்கவேண்டியிருக்கின்றது. இதனை யடுத்தவெண்பா உறுதிப்படுத்துகின்றது. அது,

---

[3]இவர் தஞ்சைநாட்டில் பிரதிநிதியாகவிருந்தவர்.

[4]பாகற்கொடியறுப்பார்:—தியாகப்பெருமான், திருவாரூரில் பங்குனித் திருவிழாவில் சுவாமி தேரினின்றும் இறங்கியபின் ராஜநாராயணமண்டபம் புக்கு மகாபிஷேகமானபின்னர் பக்தர்களுக்குக் காட்சிதருமுன் அண்மையிலுள்ள வேலங்குடியென்ற வூரிலிருக்கும் பாகற்காய்மண்டபத்துக் கெழுந்தருளி ஆண்டு உண்டாக்கப்பட்டிருக்கும் பாகற்கொடியையறுத்தல் முன்னுள்வழக்கம். இதனைத் "தியாகக் கொடியே தனிவளரச் செய்தொருநாட்,—பாகற் கொடியே பலவறுப்பான்" என்ற திருவாரூருலாக்கண்ணிகளாலும், 'ஆடாதுமாடித் தியாகர் பாகற் கொடியறுத்தார்' என்ற பழமொழியாலும் அறியலாகும்.

[5]ஊழித் துலுக்கல்ல வெட்டியான் றானுமல்ல
வீழித் துலுக்குவந்து மேலிட்டு—வாழி
சிறந்ததிரு வாரூர்த் தியாகருடைப் பூசை
யிறந்ததே கிருட்டிணரா டா.

என்பதாம். இதன் மேற்குறிப்பு கிருஷ்ணராயருக்கு எழுதிவிடுத்த பாட்டு என்று காணப்படுகிறது. இதனையடுத்து 'இது கேட்டு ராயர் ஸ்ரீபட்டரைமாற்றியபோது பாடியது என்ற தலைப்பின்கீழ்,

[6]உண்ட வயிற்றி லுமிக்காந்த விட்டதே
தொண்டரே வீழித் துலுக்கரே—பண்டெல்லாம்
அப்ப மவலெள் ளதிரசமுந் தோசைகளும்
கப்புவதும் போச்சே கவிழ்ந்து.

என்றொரு வெண்பாக் காணப்படுகிறது.

இம் மூன்றுபாக்களையுஞ் சேர்த்துப்பார்ப்போமானால், திருவாரூர்ப் பூங்கோயிலில் அமர்ந்துள்ள தியாகப்பெருமான் தொண்டரில் ஒருவகையினரான வீழிப்பிரமர் என்பார் கோயிற்காரியங்களைச் செவ்வனே நடாத்தவில்லை என்றும், திருவிழாக்காலத்திற் செய்யப்படவேண்டு

---

[5]ஊழித்துலுக்கு: டில்லிபாதுஷாவின் பிரதிநிதியாகவிருந்த மாலிக்காபூர் முதலிய தளகர்த்தர்கள் தென்னாடுபோந்து கொள்ளையிட்டதால் ஊழிக்கு ஒப்பிட்டனர். வீழித்துலுக்கு: திருவீழிமிழலையினின்றும் வந்த பிராமணர். இவர்கள் கடவுளது அணுக்கத்தொண்டர்கள். இதுபோழ்து வீழிப்பிரமர் என்பர். பிராமணர்களிடமிருந்த வேலை அவரது சிடரான வேளாளர்வசமாக இருக்கின்றது. இதுபொழுது இவர்கள் தமது திரிந்தபெயர்க்கேற்பத் தியாகேசரின்மெய்காப்பாளராக அமர்ந்திருக்கின்றனர். வீழியர் புறப்புறச்சமயிகளையொப்ப நடந்துவந்ததனால் துலுக்கரெனப்பட்டனர்.

[6]திருவாரூரில் தியாகேசப்பெருமானுக்கு நித்தியப்படி கட்டளையில் வடை அப்பம், தோசை, தேன்குழல், புட்டு, அதிரசம், சுசியன், சக்கரைப்பொங்கல் அவல் முதலாயின நிவேதனமாவது இன்றும் நடக்கும் நடைமுறை. அவற்றுள் பட்டர்களுக்குப் பங்குண்டு, அவர்கள் ஏராளமாக உண்டுவந்ததையே இங்குக் குறித்திருக்கிறார்.

வன செய்யப்படவில்லையென்றும் கண்ட அக்கோயிற் கண்காணிகளில் ஒருவரான தத்துவப்பிரகாசர் பெருமான்மீதும், அரசன்மீதும் ஆணையிட்டுக் கொடியிறக்காமற்செய்து நடந்த தவறுகளை அக்காலத்திலே அரசராயிருந்த விஜயநகரத்தரசனான கிருஷ்ணதேவமகாராயருக்குத் தெரிவித்தார். அதனைக்கேட்ட அரசன் திருவாரூர்க்கோயிற்பட்டர்களில் தலைவராயும் தவறிழைத்தவராயுமிருந்த ஸ்ரீபட்டரை மாற்றினர். அதன்பிறகு கோயிற்காரியங்கள் முட்டின்றிநடந்துவந்தன. என்ற செய்திகள் வெளிப்படுகின்றன.

மேற்கூறிய தத்துவபிரகாசர் சிறந்த கல்விமான் என்ற செய்தி தத்துவப்பிரகாச பண்டாரத்துக்கு இலக்கணம்வருமோ என்றபோது பாடியது என்ற தலைப்பின்கீழ்க் காணப்படும் செய்யுளால் விளங்கும். அது,

கவடிகளா கத்திரியுங் கள்ளர்கா ணன்னூற்
சுவடியிருந் தாவதென்ன சொல்வீர்—குவலயத்துக்
காட்டுக் கெறித்தநிலாக் கண்ணிரண்டு மில்லாதான்
வீட்டுக் கெறித்த விளக்கு[1].

என்பதாம். இஃதன்றி இவரே,

குட்டுதற்குப் பிள்ளைப்பாண் டியனு மில்லை
　　குறும்பியள வாச்காதைக் குடைந்து தோண்டி
எட்டினமட் டறுப்பதற்கு வில்லி யில்லை
　　இரண்டொன்று மயிரைமுடிந் திறங்கப் போட்டு
வெட்டுதற்குக் கவியொட்டக் கூத்த னில்லை
　　விளையாட்டுக் கவிப்பாட்டு விரைந்து பாடித்
தெட்டுதற்குத் தமிழறியாத் துரைக ளுண்டு
　　தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே,

என்றும்,

---

[1] நன்னூலைப்படித்ததனால்மாத்திரம் ஒருவன் இலக்கணம் அறிந்துவிடமாட்டான். அதனை வழங்குமாறும் தெரிந்திருக்கவேண்டுமென்பதும், நூறை கூறியோர் அவ்வாறு ஒன்றும் அறியாரென்பதும் இதன் கருத்தாகும்.

நினைவுகவி சொல்வோ மெனச்சொலிப் பிறர்கவிதை
நினைவினைத் திருடி வையோம்
நீடுலகின் மனிதரைப் பாடிலோ நாமென்று
நீள்வசைகள் பாட வறியோம்
பிணையிளைய நாவல ருடன்பங்கு பேசி
ப்ரபந்தங்கள் பாடிக் கொடோம்
பேசுவது தேவார மேயலால் வாய்க்கெளிய
பேய்க்கிரந் தங்கள் பேசோம்
இனிமைதரு பூருவத் தக்குருக் களைமறந்
தெட்டிடத் தத்தீட் சைபோய்
இட்டசிறு பேர்மாற்றி மாதமொரு பேரிட்
டழைக்கநா மிருமாந் திரோந்
தனியிருந் தெம்மைப் புறங்கூறு வார்பாடு
தணியவே கவிபா டுவோஞ்[8]
சமணூல்க ளைப்பொரு ளெனக்கொளோந் திருஞான
சம்பந்த ரடியர் நாமே

என்றும் பாடியிருப்பதால் இவர் சிறந்த புலவரென்பது வலியுறும்.

மேலும், இவரைப்பற்றித் திருத்தோணியப்பர் என் றொருவர் பாடியதாகக் காணப்படும் செய்யுள் வருமாறு:—

---

[8] இது, 'ஒட்டக்கூத்தன் என்றொரு புலவன்வாவுகேட்டு அவர் சொல்லியது' என்ற தலைப்பின்கீழ்க் காணப்படும் செய்யுளைக் கவனிக்கப் புலனும். அது வருமாறு :—

பறியாரோ நின்வாயிற் பல்லதனைப் பாரோர்
முறியாரோ நின்முதுகின் முள்ளை—சிறுகவொரு
மட்டப்பேர் போதாதோ வாக்கிதுவே யானக்கால்
ஒட்டக்கூத் தன்று னுனக்கு.

ஆயிரவர் புலவோரி லொருவன் ப்ரபந்தகவி
யவரா யிரர்க்கு ளொருவன்
அந்தாதி நூலாப் பரணிகோ வைக்கமக
னவரா யிரர்க்கு ளொருவன்
போயிடம் பெறுநா டகபுரா ணிகனவன்
போலா யிரர்க்கு ளொருவன்
பொருட்பெருங் காப்பியம் புகல்வாக்கி மற்றவன்
போலா யிரர்க்கு ளொருவன்
பாயிரந் தருபஞ்ச லட்சண விதானியப்
படியா யிரர்க்கு ளொருவன்
பாசமய தர்க்கநூல் பகர்வாதி மற்றுமப்
படியா யிரர்க்கு ளொருவன்
தேயமெண் டிசைபரவு தேசிகோத் தமனத்
திறத்தா யிரர்க்கு ளொருவன்
சிவனைத் துதித்துண் டுடுத்துக் கொடுத்திடுந்
தெய்வச் சிவக்கியானியே.

தமிழ்நாவலர்சரிதைப் பதிப்பாசிரியர் மேற்பாட்டுக்கும் (முன் தத்துவப்பிரகாசர் பாடிய பாட்டுக்கும்) இதற்கும் (திருத்தோணியப்பர் பாட்டுக்கும்) ஏதும் சம்பந்தம் இருப்பதாய்த் தெரியவில்லை யென்று எழுதியுள்ளார். இச்செய்யுளை யூன்றிநோக்குவோமானால் இவருடைய கல்வித்திறனும் சீலமும் ஒழுக்கமும், குருவாயிருக்கப்பெறுந்தன்மையும் தெற்றெனவிளங்கும்.

இனி, இவர் திருவாரூரில் வாழ்ந்தவராக முற்காட்டியசெய்யுள்களால் விளக்கமாக, தத்துவப்பிரகாச முகவுரையில் சீகாழிப்பதியினர் அந்நூலாசிரியர் என்பது எவ்வாறு பொருந்துமெனின் இவர் பிறந்த ஊர் சிவபுரமாகவும், தீட்சைபெற்று ஞானோபதேசம்பெற்றது சீகாழியாகவும், வாழ்ந்தது திருவாரூராகவும் கொள்ளவேண்டியிருக்கின்றது.

"சிவநந்தி சநற்குமரன் சிற்சத்திய ஞான
தெரிசிபரஞ் சோதியொடு மெய்கண்ட நாதன்
நவமறையான் ஞானகுரு வுமாபதிமச் சறைவான்
நற்சிற்றம் பலநாடி பழுதைகட்டும் பந்தன்
[1]சிவபுரந்தத் துவப்பிரகா சன்றிருவா ரூரிற்
செட்டித்தெரு ஞானப்ர காசன்பின் பவ்வூர்ப்
பவமொழிக்குஞ் சிதம்பரநா தன்ஞான ப்ரகாசன்
பயில்தருமைத் திருஞான சம்பந்த னுரும்"

என்பதனுள்ஒரு திருமுடியடைவு கூறப்பட்டுளது. இதனைத் திருக்கை லாயபரம்பரையென்பர் இதனால் சிவபெருமான், நந்தியெம்பெருமான், சநற்குமரர், சத்தியஞானதரிசினிகள், பரஞ்சோதி, மெய்கண்டதேவர், அருணந்தி, மறைஞானசம்பந்தர், உமாபதிசிவம், மச்சுச்செட்டி, சிற்றம்பலநாடிகள், பழுதைகட்டி ஞானப்பிரகாசர், தத்துவப்பிரகாசர், ஞானப்பிரகாசர், சிதம்பரநாதர், ஞானப்பிரகாசர், ஞானசம்பந்தர் என்ற வரிசை பெறுகின்றோம். மேற்கூறிய செய்யுளினால் இவர் சிவபுரத்திற் பிறந்து சீகாழியில் தீட்சைபெற்றுத் திருவாரூரில் வாழ்ந்து ஞானப்பிர காசருக்கு உபதேசித்தவர் என்பது பெறுகின்றோம். அன்றியும், இந்த ஞானப்பிரகாசரது பரம்பரையில்வந்தோருள் ஒருவரே இன்றும் திரு வாரூர்த் தியாகப்பெருமான் கோயிலிலுள்ள அபிடேகக்கட்டளை, அன்ன தானக்கட்டளை என்ற கட்டளைகளை நிர்வகித்துவருகின்றனர். அவர்கள் விசாரணையிற் சற்றேறக்குறைய நாலாயிரத்தைந்நூறு ஏக்கர் நிலம் இருந்துவருகிறது. திருவிழாக்களிற் பெரும்பகுதி அபிடேகங்கள் இவர்களைச்சார்ந்ததேயாகும். ஆகையால் தத்துவப்பிரகாசர் திருவாரூரில் இருந்தவராவரென்பது உறுதிபெறுவதோடு சீகாழியில் தீக்ஷை பெற்றவரென்பதும் பெறுகின்றோம்.

இன்னும், பிற்கூறிய செய்தி இவர் இயற்றியதாகக் காணப்படும் தத்துவப்பிரகாசத்திலுள்ள சந்தானகுரவர்வணக்கம் குருவணக்கங்க ளால் உறுதிபெறும். அவை,

---

[1]சிவபுரம் என்பது கும்பகோணத்துக்கு அருகிலுள்ளதொரு சிற்றூர்.

"நந்திசனற் குமான்சத் தியஞானி யடிசேர்
நாதனும் பரஞ்சோதி மெய்கண்ட தேவன்
முந்துசண் பைபர் தலைவன் கொற்றவன் குடியே
முதுபதியா முமாபதியிம் முறைமையிலே யாண்ட
செந்திருவின் பயன்சிற்றம் பலநாடி ஞன்மெய்ச்
சிவஞான வடிவான திருமேனி யடைவாய்த்
தந்தவிவர் சந்தான குரவரிவர் மலர்த்தா
டப்பாம லேமனத்தி லொப்பாக வைப்பாம்"

"மனநினைவில் வாக்கிலனை வருக்குமறி வரிய
வள்ளல்கள் ளத்தினன் மறுகுமறி விலியேன்
றனைநினைவி லுட்கொண்டே யவனவளோ டதுவாந்
தன்மையினின் மலவடிவு தன்னை மன்னித்
தினையனைய வளவிலிரு வினை துலையொப் பறிந்து
சீகாழி மன்னுசிற்றம் பலநாடி ஞனென்
முனைவினையு முடல்வினையும் வருவினையு மறுத்து
முத்தியளிப் பவன்மலர்த்தாள் சித்தமுற வைப்பாம்"

என்பனவாம்.

ஆயினும், முன்னம் காட்டிய அடைவிற் சிற்றம்பலநாடிகளின்சீடர் பழுதைகட்டி ஞானப்பிரகாசரென்றும் அவரதுசீடர் தத்துவப்பிரகாசரென்றும் கூறியிருக்க, தத்துவப்பிரகாசரதுவாக்காலேயே இவர் சிற்றம் பலநாடிகளின் சீடரென்கையாலே இரண்டும் எவ்வாறுபொருந்துமெனின், சிற்றம்பலநாடிகளிடத்திற் றீட்சைபெற்றிருப்பினும், திருமுடியடைவிலே சிற்றம்பலநாடிகளுக்குப்பின்னர்ப் பழுதைகட்டி குருவாயிருந்திருத்தல்கூடும் என்று தோற்றுகின்றது. அஃதே வான்முறையாகும்.

தத்துவப்பிரகாசர் உள்ளது உள்ளபடியும் கண்டது கண்டபடியும் உரைக்குந்தன்மையர் என்று, கிருஷ்ணதேவராயர் இவரைப்பார்த்துக் கூத்தனூரப்பன், வாலகோகிலம் என்ற கவிகள் பாடுந்தன்மை எவ்வாறு

என்று கேட்கச் சொல்லிய விடையினின்றும்,[10] முன்னர்க்காட்டிய செய்யுள்களினின்றும் விளங்கும். அன்றியும், இவர் உலோபரையும் தீயோரையும் பார்த்துச் சொல்லியதாகவும் கவிகள் காணப்படுகின்றன. அவற்றையும் ஈண்டுக் குறிக்கின்றேன்.

"குரங்குமாய் நண்டுகட்டித் தேளுங் கொட்டிக்
குடியாத மதுக்குடித்தே பேயு மேறி
இரங்கவருங் காஞ்சொறியின் பொடியுந் தூவி
இஞ்சிதின்று கொள்ளிபிடித் தெழுந்தாற் போலத்
தருங்கருணை யில்லாத புல்லர் வாழ்வில்
தண்டிகையின் மீதேறிச் சம்பத் தேறிக்
கருங்கைமதக் களிறேறிக் கழுவி லேறிக்
காடேறி நாடேறித் திரிவார் கண்டீர்"

"பாம்புகடித் தாலதுவு மீட்க வல்லோம்
பசாசறைந்தா னீறிட்டுப் பார்க்க வல்லோம்
வேம்புகசப் பறக்கறியு மாக்க வல்லோம்
விறல்வேழத் ததிகமதந் தணிக்க வல்லோஞ்
சாம்பொழுது திடமாகப் பேச வல்லோந்
தரணியின்மேற் கல்லாத தொன்று மில்லை
தீம்புரைநல் லவராக்கிக் குணமுண் டாக்கத்
திறமதறி யாமனின்று திகைக்கின் றேமே."

இவரது காலம், விஜயநகரத்தரசருள் ஒருவரான கிருஷ்ணதேவராயர்காலமாகவே, அவ்வரசர் கி. பி. 1509 முதல் 1530 வரை யரசாண்டதாகச் சரித்திராசிரியர் குறித்திருப்பதால், இவரும் அவர்காலத்தில் இருந்தவராவர். எனினும், இவரது சீடரான ஞானப்பிரகாசரும்

---

10 "மன்கவி தாவும் பொழிற்கூத்த னூரப்பன் வாய்தலைமன்
தன்கவி தெள்ளிய பால்வால கோகிலன் தானுரைத்த
நன்கவி பாலுக் கிசேர்க் கரைக்கவி நாங்கள்சொல்லும்
புன்கவி யுப்பொடு காயமென் றேசொல்லிப் போற்றுவரே"

கிருஷ்ணதேவமகாராயரைப் பாடியிருப்பதால் இவர் அவ்வரசரது ஆட்சிக்காலத்தின் முற்பகுதியில்வாழ்ந்தவரென்றுகொள்வதுதவறாகாது.

இவர் இயற்றிய தத்துவப்பிரகாசமும் தோணியப்பர்கூறியது போன்று இவரது சிவஞானத்தன்மையை விளக்குகின்றது.

இதுகாறும் கூறியவாற்றால், தத்துவப்பிரகாசர் பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே கும்பகோணத்திற்கு அண்மையிலுள்ள சிவபுரம் என்ற ஊரிலே பரம்பரைச் சைவமரபிலே தோன்றிக் கல்வி கேள்விகளில் நிறைந்து, சீகாழியையடைந்து சிற்றம்பலநாடிகளிடத்தில் ஞானோபதேசம்பெற்றுத் திருவாரூர்சென்று வாழ்ந்துவந்தார்; அங்குச் சிவபெருமான்திருக்கோயில்நிர்வாகத்தை வகித்து நடத்துங்கால் பட்டர்களுள் ஒருசாரார் சரிவரக் கோயிற்காரியங்களை நடத்தாமை கண்டு அக்காலத்திலே நாட்டையாண்ட விஜயநகரத்தரசரான கிருஷ்ண தேவமகாராயரிடம் முறையிட்டார்; அவர் விசாரணைசெய்து கோயிற் பட்டர்களை மாற்றவே கோயிற்காரியங்கள் முட்டின்றிநடந்தன; தமக்குப் பின்னர்க் கோயிற்காரியங்களை நிர்வகிக்கவும் சைவசித்தாந்தம்வளரவும் ஞானப்பிரகாசரைச் சீடராக்கி நியமனம்செய்தும், தத்துவப்பிரகாசம் என்னும் நூலையியற்றியளித்தும் போந்து பின் சிவஞான பரிபூரணரானார் என்ற செய்திகள் பெறப்படும்.

இலக்கணவிளக்க ஆசிரியர்பரம்பரை,

திரு. சோமசுந்தரதேசிகன்.

---

தொடையலின் வெறுத்த மணிவட மிலராய்ச்
சூழ்ந்ததுற் றெதிர்ந்தகற் பகங்கள்
கொடைபுரி வதனான் மறித்தும்வே றணிந்து
கொள்பவர் தொகைகுணிப் பிலவே. (௬௨)

668 கருமுகிற் குழலை யொருகாத் தனைத்தோர்
காத்திறுற் கதிர்முலை வருடிப்
பொருவரு மிலவந் துவரித ழமிர்துண்
பொழுதுயி ருடலொடுங் கலந்தே
யுருகுமவ் வளவிற் கடகமுந் தொடியு
மொருங்கொரீஇ யவற்றினாற் றதுமீஇ
யிருமருங் கினும்வாழ் கற்பகம் புரப்ப
வேற்றணி பவருமெண் ணிலரே. (௬௩)

வேறு.

669 * வெதிரெதிர்சென் றேபொரவிண் டெழுதழலவ்
வெதிரினையும் வெண்ணீ றாக்கி
யெதிர்பொருதற் [1]றிறமறியாச் [2]சந்தனப்பூம்
பொதும்பரையு மெரித்த மார்க்கம்
பிதிரெனவாழ்ந் திடுசிறியார் விளைத்தசின
மவர்திருவின் பெற்றி தேய்த்துச்
சதிருடன்வாழ்ந் திடுதலைமைத் தமர்[3]திருவு
நனிதொலைத்த தன்மை மானும். (௬௪)

670 * வீங்குபா ரைக்கழைகண் [4]முளிர்ந்தருஞ்சப்
பிறந்ததழன் மிறைசெய் காலை
யோங்குபசுங் கழைக்குலங்கண் மழைக்குலங்கீண்
டுகுபுனலா லொழித்த பான்மை
தீங்குவிளைத் திடுமுதுவ ருறுமிடரை
யக்குலத்துட் சிறுவர் முன்னர்
பாங்குபடைத் [5]தவர்கருணை முகத்தவராற்
றணித்தருளப் பான்மை மானும். (௬௫)

[பி-ம்.] [1]திறனறியாச். மா. [2]சந்தனத்தேம். மா. [3]திருவுந் தொலைத்திடுமெத். மா. [4]முளிர்ந்தனவா யுயிர்த்ததழன். மா. [5]தவகருணை. மா.

671 பாடீன்ற காடமத நதிக்களிற்றின்
மதிப்பிளவு படுத்த தேய்க்குங்
கோடீன்ற நித்திலமுங் கழையீன்ற
நித்திலமுங் குளிர்கொண் மூவின்
றோடீன்ற நித்திலமுஞ் சாலினன்
னதிச்செழுந்தண் டுறைவிழ்ந் தன்னப்
பேடீன்ற தனதுமுட்டை யுடனணைத்தங்
கடைகிடக்கும் பெற்றித் தாமே. (ருசு)

672 வன்கடுவன் றொடர்மந்தி மணப்போதும்ப
ரிடைவாவ மாடெற் றுண்ட
நன்பலவின் குடம்புரைமுட் புறக்கனியி
னகடழிந்த நன்பொன் மாறு
மின்பாதச் சிறுசுளையுந் தேமாவின்
கொழுங்கனியு மிழுக்கி நால்வாய்க்
கொன்பயிலுங் கொலைக்களிற்றின் கவுட்பிறந்த
மதநதியுட் குளிப்ப தொன்றே. (ருஎ)

673 வன்புலங்க டொறும்பார்து மதநறவு
புனல்விரவி மண்டு காலை
முன்பிலவா யிளகுமுதற் றருவுமிள
காதமுதற் றருவுந் தேசி
னன்புறுகா மமும்பொருளு [1]முணர்வுநிலை
யழித்தழிந்தோ ரறிவு மைவாய்ப்
புன்புலனோர் தையுமவித்த வாறுடை யுத்
தமரறிவும் பொருவு மன்றே. (ருஅ)

674 கடங்கான்ற காடவயக் களிறனைத்த
கடவுண்முதற் கடவு ளாய
திடங்காண்டற் குரியவரு மறைமுழுது
மவணிருந்து தெளிந்த கேள்வி

[பி-ம்.] [1]முணர்வுநிலை, சு.

மடங்காத வுானுறமுத் தமமுனிவ
ரகத்துளவாய் வளர்மெய்ஞ் ஞான
மடங்காது புறத்துவழிந் திழிவதைநீ
ரருவியெனு மங்கண் ஞாலம். (௫௯)

675 நற்பரா சரப்பிரம விருடியுஞா
னுதிகராய் நயந்து ளாரு
முற்பரா பான்மொழியாஞ் சதுமறையை
யவணிருந்து முற்ற வாய்ந்தே
கற்பதாம் வேதவியா தனுமிருப்ப
மேருவில்வீழ் கங்கை யாடிப்
பொற்பமே தகுசுகனப் பொன்வரைவாழ்
முனிவருழைப் பொருந்தி னானே. (௬௦)

676 உந்தியிலன் றுதித்தசது முகத்தயன்கேத்
திரகாண்டத் துசித மாகப்
புந்தியின்மெய்த் துரைத்திடுமிக் கேத்திரமான்
மியந்தனையே புலவ ரோடு
மந்தவட வரைமணிமண் டபத்திருந்து
புரந்தரன்பா ராட்டக் கேட்டென்
றந்தையிற்சென் றுணர்வலென வெழுந்தனனங்
கடைந்தனனத் தாதை பாதம். (௬௧)

677 புண்டரிகப் பொற்பொகுட்டா சனத்திருந்த
புனிதனெனப் போதஞ் சான்ற
தெண்டிரையைக் கேசவனே பரனெனச்சத்
தியவசனத் திடம்பெற் றானைக்
கண்டனன்கண் டுளங்களிக்கக் கருதினன்வாழ்த்
தினன்முடிமேற் கமல பாதங்
கொண்டனன்கொண் டவனையெடுத் தணைத்திறுகத்
தழுவினனுட் குழைந்து தாதை. (௬௨)

678 காதையா னதிற்புனிதர் காரணத்தாற்
சுகனெனப்பேர் கைக்கொண் டானே
மாதயா வொடுந்தழுவத் தழைதருபே
ரானந்தம் வரம்பின் றாக
மேதையான் மிகுந்தவரு முபநிடத
வியாதனென விதித்த மேன்மைத்
தாதையா னவன்றனக்குங் காரணத்தாற்
சுகனெனும்பேர் தழைந்த தென்றார். (சுரு)

679 பொற்புடைமைத் தரைப்பயந்தார் பயந்தஞான்
றினுமவர்தாம் புவனம்போற்றச்
சிற்குணராய்த் தலைப்படுநாட் பேரின்பக்
கடலகத்தாய்த் திளைப்பா ரென்றே
நற்குணனு னுரைத்ததெல்லாங் கண்டனமென்
றேதன்பா னன்பாய் நன்னூல்
கற்பவரா கியபயில ராதியர்நால்
வரும்விளம்பக் களிப்புட் கொண்டான். (சுச)

680 என்புருக வுளமுருக வெடுத்திறுகத்
தழுவியபின் பினிதி னோக்கி
நன்பொருள்யா வையுமுணர்த்தும் பனுவன்முழு
துணர்ந்துணர்த்தும் ஞான வாழ்விற்
புன்புலனைந் தையும்புறங்காண் பொறையுடையோய்
பேருவினைப் புறந்தந் தென்பா
லன்புறவின் றெனதிருகண் களிக்கவிவ
ணடைந்ததெவ னறைதி யென்றான். (சுரு)

வேறு.

681 காசல மிடங்கரின் வெரீஇபதை யறிந்துதவு
காரணன் முதுந்த னெனவாழ்
பாரபர னிருங்கமல தாளிணை யிறைஞ்சிய
பாசரன் மொழிந்த படியே

புராதன வளம்பயில் புராணவகை தந்தருள்
புரோகித னெனுந்த லைமைகூர்
தராதலம் வியந்தருள் வியாதனை வளம்பெருகு
தாதையை வணங்கி மொழிவான். (௬௬)

682 திவாநிலை பிறந்தவுக நாலினு ளறங்கிளர்
தியானதவ சிந்தை நிலைகூர்
துவாபர வுகங்களெழ நாலிவண் மறைந்திறை
சுகோதய னெனுஞ்சொ ருபனுத்
தவாநிலை பயின்றவொரு நான்மறையி னெண்பொரு
டயாமனதொ டுஞ்ச ரதரா
யவாநிலை கெடும்பயில ராதியர் தெளிந்திடவு
மாதியின் மொழிந்த முதியோய். (௬௭)

683 இராசத முடன்பிணிசெய் தாமத குணங்களய
லேசெல வரந்த ழைவதா
மாவனை முகுந்தனரு ளாகிய குணங்களினு
மாதிய தெனுந்த லைமைசார்
பாவரு பெருங்குணம தார்கலி வளர்ந்துலவு
பார்மிசை பெருங்க ருணையே
விராய்நிலை சிறந்தெழில் வியாதனென வந்தனை
மேலுல கமும்ப ரவுவோய். (௬௮)

684 குணதிசையி னின்கணுற மாதவர் திரண்டபல
கோடியென வொன்று மொளிகூர்
பணுடவி யநந்தகெரு டாதிய ரெனும்பரம
பாகவத ரன்ப டியதா
யுணுவென நயந்தரிய வூதிய மிருந்தசுவை
யூறொளி மணந்[1]த ழைவதாம்
விணுடரும் விரும்பமிர்த மானது திரண்டொரு
வியாதனென வந்த புதியோய். (௬௯)

---

[பி-ம்.] [1]தமைவதாம், சா.

685 சுராசுரர் வியந்தருண் முராரியென நின்றதொரு
சோதிநிர லங்க முறவே
நராரியென வன்றுபுடை தூணிலொரு மைந்தனுரை
நாடுபுபி றந்த வனேயே
பாராரயகில் குங்கும படீராமுழு கிங்கித
பயோதரியெ னும்ப னுவன்மான்
புராரியு மகிழ்ந்திட வியாதனெனெ வந்துபுகழ்
போதமத டைந்த பொறையோய். (எ0)

686 வடாதுட னெதிர்ந்துள தெனுதென வகன்றுரை
வழாதுநில தந்த தகைசால்
குடாதுட னெதிர்ந்துள குணுதென நெடுந்திரை
குலாயபுவ னங்க ளிடையே
யடாதிரு ளடுங்கதிர் பராசரன் வழங்குமபி
ராமனென மன்ப தைபுளாய்
விடாவிரு ளகன்றிட வியாதனென விங்குதய
மேவியந வங்கொள் பெரியோய். (எக)

687 தகாதபொறி யைந்தினும் விரோதி[1]யென மூர்துறு
தவாதபுல னேந்தின் வழியே
புகாதுகர ணங்களினை யேதளைபு ரிந்துமதி
போனிறை விளங்கு முணர்வால்
விகாரமுற நின்றெழ சராசர மடங்கலும்
விராயநில தந்த வரியாம்
அகாரவுரு வம்பிரம மாவது தெளிந்துலக
மார்வமுற வந்த பெரியோய். (எஉ)

688 வரோதய வசஞ்சல சுபோதய நிரந்தர
மனோரம மறங்கொ ளரிகூர்
விரோதிக ளெனும்பர வியோகிகள் பயங்கர
வுயோகிக ளுளந்த ழையவாழ்

[பி-ம்.] [1]யெனு. சா.

சரோருக மடந்தைமண வாளனுல கந்தொழு
தயாபரன் விரிஞ்சன் முதலோர்
சிரோதய முகுந்தனதி லீலைக ணினைந்துருகு
தேசிகர் வணங்கு மதியோய். (௭௩)

வேறு.

689 தவா சதனே யழியா வுணர்வே
தருகா ரணநான் மறைவா சகனே
கவரா மனதா லுயர்மா னதனே
கழிகா மவிகா ரமிலா தவனே
யுவரார் கலிசூழ் புவியா தியமே
லுலகே ழொடுகீ ழுலகே ழுமுளா
ரெவரா யினுநா டரிதா மறைதே
சிறையே தெனிலீ தெனும்வாய் மையனே. (௭௪)

690 அலையா ரியசா கரமா னதிலே
யழியா வரமே வியபேர் பலவா
முலையா ரதியா வையுமே படரா
வுறுபான் மையென நறுநாண் மலராள்
முலையா ளையுலா வருமார் புடையான்
முதலா கியமூ வகைமூ துரைசால்
கலையா வையும்வாழ் வுறுமா னதனே
கருணா கரனே கவிரா வலனே. (௭௫)

691 இறையா மெனலா யியலா காரா
விசையா தனவா யெழுதா தனவா
மறையா னவைதா முணர்வா ருனைசான்
மதிசார் வசிதா மறையா பவலா
விறைவா ரிதிசூழ் புவிமீ தொருமா
விடனு மெனநா மம்விய தனெனு
வறைபோழ் தறைபோ தனுரு தவையா
ரணராய் காவாழ் வுறுபூ ரணனே. (௭௬)

692 பணவா ளரவா னதிலே துயில்கூர்
பரனே பரனு மெனவே பழிதீர்
குணநூ லுரைவே தியனே யிமையோர்
குணமே ருவதா மெனுமா ரியனே
யுணர்வே யெனதா ருயிரே யுனையே
யொருதா தையதா யிவனு னுறவே
புணர்மா தவமே நிகரா கியதோர்
புரைதீர் பெருமா தவம்யா னுளதே. (எஎ)

693 செயலா வனநீ தினமே வுவதே
செயலா நினைவோ [1]டறிவோ ரதன்மே
லுயலாம் வகையா தெனநா டலினு
லுனையே பிரியா துறைவா ருடனே
பயலா மெனவே பழகா தரவே
பயிலா தலைநீர் வளைபா ரிடையோ
ரயலா னெனவே திரிதீ வினையா
தறியே னடியே னதுகூ றுதியே. (எஅ)

694 உலகா னதில்வாழ் வுறுதா தையவா
யுறுமா நிதியா கியயா வையுமே
குலமா மகனே யுடையா னெனவே
கொளலாம் வகைதான் மனுநூல் சொலுமா
லிலகா ரணமா தியமா நிதியீ
திலவா யுடையா யவையா வையும்யா
னலனே கொளலா முறைதா னடியே
னறியே னறியே னதுகூ றுதியே. (எகூ)

695 பழுமா மரமா யினதூ ரிலுளே
பணிதாழ் கனியோ டெழிலூ ருணிநீர்
வழுவா தனவாய் நிறைநீர் மையதா
மதிசால் பவர்பா லுளவாழ் வெனவே

---

[பி-ம்.] [1]டறிவா. சா.

யெழுபார் சொலுமா லுனதா கியவாழ்
வெனதா யமையா ததைநா லுனையே
யழுதார் புறவே கொளலும் வகையே
தறியே னறியே னதுகூ றுதியே. (அ௦)

696 அனவா கனனா ரருண்மா தவரா
லரனு லயிரா பதனு லமுதா
சனரான் மதிநூஞ் மனதார் புறவே
சதிரா யரிதாய் நுழைஞா னமதா
லெனதா கியமா [1]நிதியா னதிலே
யினிதா னதினீ பலகால் வினவா
வுனதா கியமா நிதியாம் வகையா
ததுதா னுளதோ வுரையாய் சுதனே. (அக)

697 வரைமே தினிபூ வுடனே தொலைபோன்
மறையா தியநூ லினையே யருள்வார்
தரைமீ தெவர்பா லருள்வா ரெனிலோ
தமினு மகனே முதலா முதனூ
லுரைகோ ளுடையார் தமையீ றெனலா
யுணர்வா ரிருமூ வர்களா மெனுமால்
விரைவாய் மலரோ னுரைநூ லினுணீ
வினவா துரையா ததும்வே றுளதோ. (அஉ)

698 இருளீர் வனமா மதிகூர் நெறிசா
ரெழுதா வொருநான் மறையா தியநூ
லொருகா லுரைகூர் வனமீ ளவுமே
யுரையா துயர்மே ருவிலோ தியநீ
குருகா புரிமான் மியமா னதையே
குறையா துரைவாய் மையினுன் முதனு
ளருளா யருளா வகையா தெனவே
யறியே னடியே னதுகூ றுதியே. (அ௩)

---

[பி-ம்.] [1]னிதி. சு.

699 அழியா தவரோ தயவே தபுரா
ணமோடா சறுகி தைபா சானர்
பழியா னதுரு துறவோ தியபான்
மையவா யவையா வையுமோ தியநா
ளொழியா வருள்சேர் சுகனு மெனவே
யொருபே ருடையா யதைநான் விரிவாய்
மொழியா வகையா தெனிலோ வொருநான்
முகனு லமையா மொழிகா ணதுவே. (அச)

வேறு.

700 நான்முக ஞகிய மான்மக ஞமொரு நான்மறை யேதெளிவா
னூன்முக மானதி ஞாணர் தாமொரு னூறிரு நாலெனவாழ்
பான்மைய வாகிய கோயில்க ளேமொழி பாசுர மானதையே
வான்மிசை வானவர் நானில வானவர் வாய்மையி னூர்புறவே. ()

701 காரண மாயைய தால்வரு காரிய காரண நீர்மையவாம்
பூரண மாகிய பூத விபூதிய பூத விபூதியெலாம்
வாரண மூலமெ ஞவரு ளேபுரி வாழ்வுடை மாதவனு
நாரண னேயிறை யாமெனு மேதகு நாவல னுமுனைசால். (அசு)

702 தாதை பராசர ஞதர வானுரை சால்பரு காதனவாய்
வேத பாரயண மாமுனி யாகிய வேதவி யாதனுநீ
டாதர வாய்மக ஞகிய தோர்சுக ஞதியர் கேண்மினெனு
மாதவன் மாநகர் வாய்மையை யாவரும் வாழ்வுற வேமொழிவான். ()

ஐந்தாவது:

கேந்தமாதன வருணனைச் சருக்கம் முற்றும்.

---

ஸ்ரீ:

## ௬. பரமபதவருணனைச் சருக்கம்.

703 உத்த மப்பொரு ளொன்கினு ளுலப்பில்[1]கீர்த் தியனு
னித்த மாகிய வீட்டியல் ஞானவே தியனு
மத்த னுதிய ருரைக்கடங் காததென் றறிந்துன்
மத்தர் போலினு வுரைக்கவுந் துணிந்ததென் மனனே. (௧)

704 அரிய வற்றுளொன் றுனுமெய் தரிபதா ராயிற்
பெரிய வற்றுளீ தேபெரி தெனுமதி பிறந்தும்
விரிய மூற்றுணர் வியாதனெண் மதியுமீ மிசைபோய்த்
திரியு மேயெனி லெனக்கெளி தாவதுந் திடனே. (௨)

705 தனு து புன்மையயோ டிசைதராத் தவமுடை யிவறன்
மனுத டைந்தவன் மடவரின் மடவனு மாற்ற
மெனுதி டத்துடை மையதெனு வளித்ததிங் கிதன்சால்
புனுது ணர்ந்துணர்த் துதற்கொருங் கிசைந்ததென் னுளமே. ()

706 அளவி லாமறை நிதிவிதி வெளிப்படுத் தடைந்தோர்
வளவ ராயறம் பயின்றுயிர் தளிர்ப்பதை மதித்தோ
ரிளவ லாமடன் றுனுமொன் றிருளினும் கெய்திக்
கொளவ லாண்மையிற் கிளப்பதற் றிதனையான் கூறல். (௪)

707 துறவி னின்றவர் துதிசெய்தோன் மறைச்சிற கரினெண்
பறவை நாதன்மூன் னுலங்குமோர் பறவைய தெனவே
சிறக சைத்தெழுந் தெதிர்பறப் பதனெடு சிவனு
மறனு ணர்ந்தசொற் புலவர்முன் பிதனையா னறைதல். (௫)

703 விரைசை யென்பதோர் திருநதி யுளததன் மேலு
முரைசெ யிம்பரு முறைதரு முபயபே ருலக
மரைம டந்தையு மொவிதிரைப் பனிக்கடல் வளாகத்
தரைம டந்தையும் புணர்முகுந் தனுக்கமைந் தனவே. (௬)

---

[மூ-ம்.] [1]கீர்த்தியனு. சா.

709 பீடு லாமறைப் புருடனு கத்தினிற் பிறந்த
வாடல் சால்வெயர் வழிந்தொழுக் கெறிந்ததொன் றரும்பொன்
னேடு லாயபன் மலர்நவ மணிதுவன் றிமையோர்
கோட லாயதெள் ளமிர்தினும் வியத்தகு குணத்த. (எ)

வேறு.

710 கற்றவாய் கமழு மதனதாங் கமழ்ச்சி
கவினுறு மேன்மையந் தாம
முற்றதா ரெனின்மா தவனறி துயிற்கென்
றுவந்தமெல் லணையதா மநந்தன்
பெற்றுளா னறியப் பிறந்துளா னவன்றன்
பீடுடை யாயிரப் பகுவாய்
சொற்றனுன் மதுர மதனதா மதுரந்
துணைவரூஉ மென்பர்மெய்த் துறவோர். (அ)

711 காமர்நன் னதியுட் சனித்ததெய் வீகக்
கண்மலர் கணக்கில வவற்றுட்
பூமகன் றனைமா தவன்பெறு கமலம்
பொருவுமோர் தாமரைக் கடவுண்
மாமணி தமியோர் சிகரகோ புரங்கள்
வகுக்கலாம் பருவம துடைத்தாம்
பாமவால் வளைக ஞான னிடப்பாற்
பாஞ்சசன் னியம்பொரு வருமே. (கூ)

712 [1]பொன்னிதழ்க் கமலப் பொகுட்டில்வீற் றிருக்கும்
புட்குலம் வரம்பில வவற்று
ளன்னமென் பதற்குங் கரைகுலா மயிற்கு
மமைந்துள சிறையினே சிறகு
தன்னையொப் பரிதா மிருவரேற் றமுமாற்
றூரணிப் பறவையுட் பறவை
மன்னவற் கொருபுள் ளிணைவரி னுரைக்கு
மற்றைய தமக்குமொப் புளவே. (௧௦)

[பீ-ம்.] [1]பொன்னிதட். ச.

வேறு.

713 சிற்கு ணாதிக னருட்கிலக் காகிய திறத்தோர்
கற்ப காலமா யையிற்படிர் துழல்கடன் கழிந்தே
தற்ப டிந்தெழ மாசறக் கழுவுத றலைமேற்
பொற்ப நன்கரங் குவித்தபோன் முகிழ்த்ததம் புயமே. (கக)

714 சகல முத்தரும் புனிதமுற் றுடலுயிர் தளிர்ப்பான்
புகலி டத்ததா யினமெனுங் களிப்பினெப் பொழுது
முகம லர்ந்தினி யவைபா யினிதுகாண் முறைபோன்
றகம லர்ந்துள கமலமோ டாம்பலுற் பலமே. (கஉ)

715 பூத்த வுந்தியர் தடத்தினுன் றொண்டர்தம் புலத்தே
வாய்த்த புட்பகத் தமைந்திழி பொழுதணி வதற்கா
யார்த்த தெண்டிரைக் கரங்களாற் றுறைதொறு மடைவே
கோத்து வைத்தபோற் கொழித்தொளி விடுமணிக் குவையே. ()

716 மூண்ட கத்தகட் டகட்டினிற் றிரைகொழி முழுநீலம்
வண்டு வான்கதி ரருமணி சுடர்வளர்ப் பனமாயோன்
றொண்டர் தற்படிந் தெழுநிலைத் தூபம துடன்றீபங்
கொண்டு நின்றருச் சனைபுரி திறமெனுங் குறிகாட்டும். (கச)

717 பூசல் வெண்டிரை திவலைபி னெடுமுறு புலந்தோறும்
[1]வீச நீடுபன் மணித்தொகை விண்ணவர் பெருமான்மே
னேச முற்றவ ரடிகளிற் பற்பல நிறத்தோங்கும்
வாச நாண்மலர் மறைபா யிறைப்பதாம் வகைமானும். (கரு)

718 விமான மெய்துபு மிகுந்தபா ழிகந்துமெய்த் திருவின்
புமானு வந்துறை பொன்னகர்க் கேகுநர் புகத்தெட்
பமான பண்ணவர் படிவமே யருள்கர பரிசத்
தமான வன்றனை நீப்பில வாயமைந் துளதே. (கசு)

---

[பீ-கு.] [1]வீசு. சா.

## வேறு.

719 தில்லியம் பாரி சாதந் தேவதா ரம்மர் தாஞ்
சல்லிய கரணி சாலி சந்தகி லோமை காம
வல்லிமல் லிகைய சோகு வலம்புரி மாழை வாழை
நெல்லிவெண் ணாவல் பூவை ஞாழலே லந்தற் கோலம். (கஎ)

720 மாதவி சூரல் வேரல் மாமரம் பலவு கொன்றை
சூதமாம் பிரம்ப லாசு தோன்றிமா தளையிருப்பை
தாதகி நாளி கோரந் தணக்கில வங்கங் கன்னல்
கேதகை துல்லை முல்லை கிஞ்சுக மில்லம் வில்லம். (கஅ)

721 வன்னிகுற் குலுக்கொ மூந்து மகிழிரு வேரி வெள்ளில்
கன்னிகா ரங்கு ருந்து கடுகரீ தகிசெ ருந்தில்
பன்னிபுன் னாகம் பூகம் பாதிரி நமைவெட் பாலை
சன்மலி பகன்றை பூல்வேற் காமரா விரைமஞ் சட்டி. (கசு)

722 கடம்புநா ரத்துத் தாலக் களங்கருங் காலி சீந்தி
லடம்பர சாச்சா வெட்சி யழிஞ்சில்சீ ரகமு ழிஞ்சில்
வடந்தரா யெனுமிச் சிஞ்சி பரிசன மாஞ்சி யென்றே
யிடம்பயின் றனவா யேனை யவற்றொடு மெண்ணின் றாயே. (உ0)

723 சுவணமாண் சினையி னோடு சுடர்விடு மிலதை பூட்பப்
பவனமென் கணும்பூத் தேறல் காய்கனி பயப்ப தல்லா
லவணவாந் ததிபர்க் கன்பா லாடகத் துகிலர் தாமம்
புவனம்பா வைபுங்கா மிப்பப் புரக்குமொப் புரவி னோடும். (உக)

724 ஆதிகே சவனே என்று மனத்தையு மீன்று நின்றுண்
வேதவே தியனே யென்னும் வேதமு மளவை காணு
நீதிநா ரணனே யென்று நின்றியங் கினவா யெண்ணில்
சோதிசால் வடிவுற் றென்றூற் றுணிவதா ரவற்றின் பண்பே. ()

இவையாறும் குளகம்.

## வேறு.

725 புனித வானவ ரமுதினுக் குஞ்சுவை புரந்தோங்கு
மினிய வான்கனி யுதவுதா பரங்களு ளெப்பாலும்
பனிகொள் வெண்மதி வேணியான் கயிலைபோற் பணைத்தொன்றுங்
கனிக ளீனும்வெண் ணுவலின் பணைப்பெவர் கணிப் பாரே. (உ௩)

726 பார மேருவெண் ணுவலின் கனியினுட் படுபானந்
தீர வானவ ரமிர்தினை நிகர்த்தது திடனுறு
லார வாரமோ டதன்கனி பதனழிந் தருள்ஞான
வீர பானமோ டிணைபொரு பான்மையார் விதிப்பாரே. (உ௪)

727 பூவிற் றெண்ணறு வழிந்திழி நதியுடன் புலந்தோறுங்
காவிற் றீங்கனி யழிந்தகு பானமுங் கரைதோறும்
வாவிப் பூநனை வழிந்திழி தடினியும் வாய்வைத்தோர்
நாவிற் கின்னமிர் தாகுமங் நதிபுது நனிகூர்ந்தே. (உ௫)

728 வரிவ ளைக்குலம் வரிவளை வளைத்திட வலமாகப்
புரிவ ளைக்குலந் துறைதொறுந் தழங்குதல் புரமாளக்
கிரிவ ளைத்தவன் போற்றுகே சவனருட் கிளைகண்டே
யரிவ ளைத்தெழு சோலையின் புறத்ததிர் வனமாலும். (உ௬)

729 பொன்ன றுந்துணர் துதைந்தபுன் னையம்பொழிற் புறத்தாய
துன்னன் மொய்த்தெழு சோலையுள் வரிக்குயில் கறங்கோதை
நன்ன கர்க்கரை யடைந்தனர் நாரணன் றமரென்றே
சின்ன மூதுவ தாமெனத் தெருட்டுமெண் டிசைதோறும். (உ௭)

730 தெழிக்கும் வெண்டிரைக் கரங்களாற் சேணிடைத் திசைதெள்ளிக்
கொழிக்கு மாமணிக் குன்றினுட் குபேரனைக் குணத்தாலொப்
பழிக்கு நித்திலப் பத்தியப் பத்தியி னகத்தாகச்
சுழித்து யர்த்திய வளைகண்மேல் வயிரமுந் துதைஞாங்கர், ()

731 தரிய மாமணிக் குவையினைத் திரட்டிபு கண்காண்டற்
குரிய வாயசெம் பொற்கொடி யொடும்பசுந் தொளிவீசும்
புரிய வாம்பொனங் கொடிகளைச் செறித்தலும் பரவாழ்வு
புரியு மாமணி மண்டபம் பொருவுமப் புறமன்றே. (உ௯)

இவை யிரண்டுந் தொடர்.

732 கடவுண் மாநதி நடுவண வளைத்தெழு கவின்காமர்
சுடர்கு லாங்கன காசல நள்ளிடைச் சுடர்தூண்டிப்
படர்வ தாம்பளிக் கறைமிசை படர்திரை படர்ந்தோங்கித்
திடர்ப டத்தா ளத்தினைத் திரட்டிய திடர்மீதே. (௫0)

733 காசை நாண்மலர் நீளிடைக் கொம்பாற் கவிழ்த்தோங்க
வாசை தோறுநின் றவர்விழி களிதர வமைவாழ்வு
மோசை பெற்றுள பாற்கடற் புரிசையு ளூரவோராற்
பூசை பெற்றுள வராவணை மேற்றுயில் புயன்மானும். (௫௧)

இவையிரண்டுந் தொடர்.

வேறு.

734 இன்ன திக்கினின் றெழுந்தது விழுந்ததிக் கிதெனப்
பன்ன ருஞ்சிறப் பினபகி ரண்டகோ டிகளைத்
தன்ன கத்திடும் பாழினும் மடங்கெனத் தகைத்தே
மன்னு மேதக வுடையதொன் றதனையார் மதிப்பார். (௫௨)

735 அந்த மாநதிக் கப்புறத் துள்ளதந் தாம
மிந்த மாயையிற் சனித்ததன் றிறைவன்முற் குணத்தாற்
றந்த வப்பிரா கிருதத்திற் சனித்தவைம் பூதத்
தொந்த மேயது சுடர்வடி வெடுத்ததாய்த் தோன்றும். (௫௫)

736 உறுபு கழ்ப்பா மேட்டியுத் தமப்புமா னுசிதம்
பெறுவ ணப்புடை விச்சுவம் போறி வுடையோர்
மறுவ றப்பகர் நிவிர்த்திவா னுயர்வள நிலாய
சறுவ னென்றவற் றின்பெயர் நான்மறை தருமால். (௫௪)

737 புகன்றி டும்பா மேட்டியும் புமானுமே புரைதீர்ந்
தகன்ற வவ்வுல [1]காயமும் வான்சுவை யமிர்தும்
பகர்ந்த விச்சுவ நெடுங்கன னிவிர்த்தியாம் பவன
மிகந்த வம்பாஞ் சறுவனென் பதுமுறை யெனுமே. (௫௬)

[பீ-ம்.] [1]தாவதும், சா,

உ

# கடம்பர்கோயில் உலா.

## சித்திவிநாயகர் காப்பு.

### வெண்பா.

பொன்மருவு தென்கடம்பைப் பூரணவி லாசருலா
நன்மதுர மாக நவிற்றவே—என்மனத்து
வஞ்சத் திருப்பதஞ்செய் மைந்துறுசித் திக்களிற்றின்
கஞ்சத் திருப்பதமே காப்பு.

## அவையடக்கம்.

நன்னிலஞ்சே றுக்கிடினு நன்குமகிழ் வார்முனியார்
செந்நெல்விளை வெய்துஞ் சிறப்புடையோர்—இந்நிலத்தில்
என்சொலிக ழார்புலவோ ரீசனுலா வென்றுகொள்வார்
புன்சொலெனுர் கொள்வார் பொருள்.

# நூல்.

## கலிவெண்பா.

### இறைவன் பெருமை.

1 சீர்கொண்ட சத்தி சிவமா யருள் புரியும்
பார்கொண்ட சோதிப் பசுபதியாய்—ஏர்கொண்ட
2 அண்டமா யண்டத்தி னப்பாலா யிப்பாலாய்ப்
பிண்டமாய்ப் பல்லுயிரின் பேதமாய்ப்—பண்டை

---

# குறிப்புரை.

காப்பு: பொன்—திருமகள். வஞ்சத்து இருப்பு அதம் செய்; அதம்—அழிவு. மைந்து—வலி.

அவையடக்கம்: விளைவைப் பின் எய்தும். சிறப்புடையோர் மகிழ்வா ரெனக் கூட்டுக.

3 அருவா யுருவா யருவுருவ மொன்றாய்
மருவாய் மலரின் வடிவாய்ப்—பெருவாழ்வாய்

4 எல்லா வுயிர்களுக்கு மின்பம் புணர்த்திவைக்கும்
வல்லான் கருணை மகாதேவன்—தொல்லைமுது

## தல விசேடம்.

5 வானோர் துதிக்க மறைமுழங்க வானோரும்
ஏனோரும் வந்து பணிந் தேத்தெடுப்பத்—தேனாரும்

6 வெள்ளி வரையின்மிசை வீற்றிருப்பப் பூங்கமலத்
துள்ளிருப் போனன் புடன்பணிந்து—வள்ளலை

7 அன்பருன்னாற் பெற்ற வழியாப் பெரும்பதவிக்
கென்பதவி சொல்லி னிணையாமோ—மின்பருதி

8 ஒக்குமோ வென்றுற் றுணர்ந்தே னருவருத்து
மிக்க சிருட்டி விரத்தியுற்றேன்—இக்கணமே

9 முத்திப் பதத்தின் முறையுரைக்க வேண்டுமென
அத்த னகைத்தங் கருள்செய்வான்—பித்தொழிந்து

10 வந்தனையே முன்னாண் மறந்தனையே யஞ்சலினிச்
சிந்தனையென் கேளாய் திசைமுகனே—பந்தமற்றோர்

11 இம்மை மறுமையென்ப தெல்லா மறிந்தறிவால்
தம்மையறிந் தெம்மையன்றே தாமறிவார்—செம்மைமனப்

---

3. அரு—அரூபம். அருவுருவம்—ரூபாரூபம். மருவாய்—மணமாகி. மலரின் வடிவாய்: "வாச மலரெலா மானாய் நீயே" திருநா. தே.

6. வெள்ளிவரையின்மிசை—கைலைமலையின்மேல். பூங்கமலத்துள் இருப்போன்—பிரமன்; எழுவாய்.

7. மின் பருதி—மின்னலானது சூரியனை.

8. சிருட்டி விரத்தி—படைத்தற்றொழிலில் வெறுப்பை.

9. என—என்று பிரமன் கேட்ப. அத்தன்—சிவபெருமான். பித்து—மயக்கத்தை.

கமலத்துள்ளிருப்போன் (6) என (9)

10. இனி அஞ்சல். சிந்தனை—கவலை.

12 பக்குவத்த னல்லேயினும் பாரிடத்தின் மேலான
தெக்கண காசியெனுஞ் சீர்பொருந்தும்—மிக்க

13 கடம்பவன மொன்றுளது கண்டாலு முள்ள
மடம்பவநந் தக்கதியும் வாய்க்கும்—இடம்பெரிதாம்

14 அத்தலத்தி னீசென் றரியதவஞ் செய்தக்காற்
கைத்தலத்தி னெல்லிக் கனியெனவே—முத்தி

15 நெறியு நெறிக்கு நிலேயான நந்தம்
குறியு மறிவாய் குறித்தங்—குறுதியென

16 வேதன் பணிந்தெழுந்து மேவுபொன்னி நீராடி
மாதவங்கள் செய்து மகமியற்றி—நாதன்

17 அருள்பெற் றணிநகரு மாலயமுஞ் செய்து
மருளகற்று சித்திரையின் மன்னும்—திருவிழாக்

18 கண்டழியாப் பேறுபெற்ற காரணத்தி னுற்கொண்ட
தண்டலே யென்னுந் தனிப்பெயரும்—கொண்ட

19 பிரமபுர மென்னும் பெயரும் படைத்துப்
பாவு கடம்பைப் பதியான்—சூரை

20 ஒடுக்கும் புகைக்க ணொருவா ளரக்கன்
இடுக்கண் பொறும லெதிர்த்தே—கடுத்துப்

---

12. அல்லே-அல்லாயாதலால்; இன்னும் அல்லே.

13. உள்ளம்மடம்-மனத்திலுள்ள அறியாமை; உள்ள: பெயரெச்சமுமாம். பவம்-பிறப்பு. நந்த-கெட. கதி-முத்தி.

15. குறி-திருவுருவம்; ஸ்வரூபம். என-என்று கைலேயிற் சிவபெருமான் கட்டளேயிட.

17. சித்திரையில்-சித்திரைமாதத்தில்; 51-ஆம் கண்ணியைப் பார்க்க.

18. கண்டு-செய்து. தண்டலே: இது குழித்தண்டலேயெனவும் வழங்கும்; "குழித்தண் டலேயானேக் கூறு" என்பர் ஐயடிகள்காடவர்கோன்நாயனூர்.

19. கடம்பையென்பது கடம்பர் கோவில், கடம்பந்துறை, கடம்பவன மென்பவற்றுள் ஒன்றன் மரூஉ; 120, 363, 383; கடம்பு-தலவிருட்சம்.

20. அரக்கன் இடுக்கண்-அரக்கன்செய்தருன்பத்தை. கடுத்து-கோபித்து.

21 பொருமயிடற் காய்ந்தாடன் போர்க்குத் துணையாய்
வருதிறலி னேங்குசத்த மாதர்—பெருவலியாற்

22 சாடிப் பொரலுஞ் சலித்து மருண்டுபயர்
தோடிச் செலும்போ தொருவஞ்சம்—நாடியே

23 ஆதித் தனைப்பார்த் தருந்தவஞ்செய் மாமுனிபாற்
பேதித் தவன்மறைந்த பெற்றிதனைச்—சோதித்

24 திடாதே யவனிவனென் றெண்ணி முனியை
அடாது செயப்பிரம வத்தி—விடாது

25 தொடரப்பல் கோடிதலஞ் சூழ்ந்தும் தவிரா
திடர்தொலைக்கு நீபவனத் தென்றாய்—உடனிருக்கும்

26 தன்னை யருச்சிக்கத் தான்மகிழ்ந்து நின்றிடுமேழ்
அன்னையர் பாவ மகற்றினேன்—முன்னைவினை

27 மாசகலும் வேதசன்மா மாமறையோன் செய்தவமும்
பூசனையுங் கண்டவன்முன் போந்தருளிக்—கேசவனை

28 ஒப்பாய் நமதன் புடைமையினல் வேண்டுவதென்
செப்பா யெனவுரைக்கத் தென்மதுரை—மெய்ப்பதியில்

---

21. மயிடற் காய்ந்தாள்-மகிஷாஸுரமர்த்தனி; துர்க்கை. சத்தமாதர்-எழுகன்னிகைகள்.

22. சாடி-அடித்து. வஞ்சம்-மாயச்செயலை.

23. அவன்-புகைக்கண்ணரக்கன்.

23-4. சோதித்திடாதே-ஆராயாமல். அவன் இவனென்று-அந்த அரக்கன் இந்த முனிவனென்று. அடாதுசெய-கொல்ல; இது மங்கல வழக்கு. பிரம அத்தி-பிரமஹத்தி.

25. தொடர-எழுகன்னியரைத் தொடர. என் தாயென்றது அம்பிகையை.

26. தன்னையென்றது சிவபெருமானை.

27. வேதசன்மாவென்னும் பெயரையுடைய பெரிய அந்தணன்.

27-8. அன்புடைமையினல் கேசவனை ஒப்பாய்; சிவதத்துவ விவேகம் 9-ஆம் செய்யுளைப் பார்க்க.

29 தோன்று மலயத் துவசன்மக ளாய்க்கயற்கண்
மூன்றுமுலை யுற்றவண்முற் றுமுலையாய்—என்றிடப்பின்

30 எந்தை மணஞ்செய் தியன்றதிருக் கல்யாண
சுந்தரனுந் தன்மையிங்குத் தோற்றிடென — அந்தப்

31 படியே தரிசனமும் பாலித்தாட் கொண்டோன்
அடியார்க் கெளியவ னாதி—முடியாச்

32 சுகத்தியன் மாமுனிவோர் சூழ்ந்து பரவும்
அகத்தியன் பூசனைசெ யையன்—சகத்தசுரச்

33 சோமகன் வேதத் துரகதத்தைப் பாதலத்தில்
ஏமமுறக் கொண்டொளித்தங் கெய்திடலும்—தாமோ

34 தரன்வணங்கி நின்று தவம்புரியச் சைவாத்
திரங்கொடுக்க வாங்கித் திருக்கா—விரியிலவன்

35 மச்சவுரு வாயுததி யார்க்கத்திற் சென்றவன்றுஞ்
சச்செகுத்து மீண்டுதிருச் சந்நிதியில்—வச்சு

36 வணங்கமறை வாயிருந்த மாமறைவாய் தோறும்
இணங்குசதுர் வேதபுரி யீசன்—குணங்கடந்தோன்

---

29. கயற்கண்ணையும் மூன்றுமுலையையும் உற்றவள்; அங்கயற்கணம்மை. முற்றுமுலை: இத்தலத்து அம்பிகையின் திருநாமம்.

30. எந்தையென்பது முன்னிலையின்கண் வந்தது. என—என்று வேத சன்மா வேண்டிக்கொள்ள.

31. எளியவன் ஆதி.

31-2. முடியாச்சுகத்து—பேரின்பத்தில்.

32-3. அசுரச் சோமகன்—சோமகாசுரன். துரகதம்—குதிரை. அங்கு—அப்பாதலத்தில்,

33-4. தாமோதரன்—திருமால். சைவாத்திரம்—பாசுபதாத்திரம். அவன்—திருமால்.

35. மச்ச உருவாய்—மீனவடிவமாகி. உததி—கடல். துஞ்ச—இறக்க. வச்சு—வேதங்களை வைத்து.

36. மறைவாயிருந்த—கண்ணுக்குப்புலப்படாமல் இருந்த.

37 கந்தவேண் மூந்தக் கடிமலரா லர்ச்சித்துப்
புந்திமகிழ் கந்த புராநாதன்—பந்தமுற

38 வல்லார்க்கு மூந்துற வல்லார்க்கு மில்லார்க்கும்
எல்லார்க்குந் தாயா யினிதளிப்போன்—தொல்லைப்

39 பலிக்குமுனந் தாருவனப் பாவையர்முன் சென்றேன்
எலிக்கு மரசளிக்கு மெந்தை—புலித்தோல்

40 உடையா னெனையா ளுடையான்சொல் பூதப்
படையான் கணிச்சிப் படையான்—விடையேறு

41 வானனத்தன் வானனத்தன் வந்துதுதிக் குஞ்சாம
கானனத்த னீள்கதம்ப கானனத்தன்—மீனவிழிப்

42 பாணிகொண்ட சென்னிப் பசுபதிபஞ் சானனத்தன்
பாணிகொண்ட சென்னிப் பரமேட்டி—நாணிகொண்ட

---

37. பந்தம் உற-பாசம் உறுதலினாலே.

38. வல்லார்க்கும்-வல்லமை இல்லாதவர்களுக்கும். துறவல்லார்க்கும்-துறத்தலில் வன்மையை உடையவர்க்கும்; துற : முதனிலைத்தொழிற்பெயர். வல்லார் : 'வல்லார்திறைகொள்வர், வல்லார்திறைகொடுப்பர்' (இ. கோ. உரை, உதாரணம்.) இல்லார்க்கும்-வறுமையையுடையவர்கட்கும்.

39. பலிக்குச் சென்றேன். எலிக்கும் : உம்மை இழிவுசிறப்பு. அரசு-அரசாட்சியை. இக்கண்ணியிற்குறிப்பிட்டது மகாபலி சக்கரவர்த்தியின் வரலாறு; "வெண்ணெ யுண்ண வெண்ணுபு வந்து, நந்தா விளக்கை நூந்துபு பெயர்த்த, தாவுபுல் லெலிக்கு மூவுல காள, நொய்தினி லளித்த கைவளம் போற்றி" கோயினான்மணிமாலை, 40.

39-40. தோல் உடை-தோல்ஆடை. படை-சேனை, ஆயுதம்.

40-41. விடையேறுவான். அனத்தன்-பிரமனும். வான நத்தன்-பெருமை பொருந்திய சங்கையுடைய திருமாலும். சாமகானன் அத்தன்.

41-2. மீனவிழிப்பாணி-கங்கை; பாணி-நீர். சென்னியைப் பாணியிற் கொண்டபரமேட்டி; சென்னி-பிரமகபாலம்; பாணி-கை.

43 மாகனக வில்லியிம வானுதவும் வல்லியிடப்
பாகனக வில்லிற் பதிகொண்டோன்—யோகனகன்

44 நாவி லிரதனொரு நால்வேதத் தந்தியான்
தூவெண் சரீரத் துரகத்தான்—மூவுருவன்

45 அம்பலத்து ணின்றுநட மாடும் பதாதியான்
நம்பலரைப் பார்த்து நகைசெய்தோன்—செம்பொனதிச்

46 சுத்தக் கடம்பந் துறையாசன் றெய்வதமாய்
வைத்தசத்த கோடி மகாமந்த்ரி—அத்துவிதன்

47 தற்பரன் பூத தளகர்த்தன் றூரணியிற்
பற்பலவாந் தானு பதியினன்—பொற்புற்

48 றொருமூவ ராயசத்த னேங்குகுலத் தோரைக்
கருமத் தடக்குமதி காரி—பெருகுதிறற்

49 கானு காணிகன் பாடலிலே கற்பித்தோன்
மானசச் சீர்மை மகாசனன் —தீனபிர

---

43. கனகவில்லி-மேருமலையை வில்லாக உடையார். வல்லி-பார்வதி. இடம் பாகன். நக இல்லில்-மலையாகிய வீட்டில்; அக இல்லிலென்றுகொண்டு அன்பர்களது இதயமாகிய வீட்டி லெனவும் பொருந்தும். யோகு அனகன்; யோகு-யோகம்.

44. நாவில் இரதன்-நாக்கிற் சுவையாயிருப்பான். வேதத்து அந்தியான்-வேதத்தால் முடிவுசெய்யப்படாதவன். சரீரத்து உரகத்தான்; உரகம்-பாம்பு.

45. பதாதியான்-பதத்தையுடைய முதல்வன். நம்பலரை-பகைவரை. பொன்நதி-காவிரியாறு.

44-5. இவற்றில் இரதமுதலிய நால்வகைப் படையுடையானென்னும் பெயர்கள் தோன்றுகின்றன.

46. மந்த்ரி-மந்திரத்தையுடையவன்.

47. பூததளகர்த்தன்-பூதப்படைக்குத்தலைவன்.

48. மூவர் ஆய-மும்மூர்த்திகளாகிய. சத்தன் - உண்மைப்பொருளாக உள்ளவன். கருமத்து-தத்தம் தொழில்களில்.

49. கால் நுகர் அணிகன்-காற்றை உண்ணும் பாம்பாகிய ஆபரணத்தையுடையவன்; அணிகம்-ஆபரணம்; அணி திரிந்து அணிகமாயிற்றென்பர்; (சீவக. 2811, ந.) பாடலில்-இசைக்கு. ஏகல் பித்தோன்-தூதாகப்போதலையுடைய பித்தன்; "பாதஞ் சிவக்கப் பசுந்தமிழ் வேண்டிப் பரவைதன்பாற், றூதன்று சென்றதென் னூரூர்த் தியாகர்" (திருவாரூர்க்கோவை.) மானசம்-மானஸம். மனத்திலுள்ள தூய்மையாகியசிறப்பே தனக்குப் பெரிய ஆசனமாகவுடையவன்.

50 வர்த்தகன் பண்ணை வருத்துரைக்கும் பங்காளி
அத்த னமல னமரேசன்—கர்த்தன்முனந்

### திருவிழா.

51 தோடலருங் கஞ்சன் றொகுத்துப் பணிதிருநாள்
மேடமதிச் சித்திரையின் மேவுதலும்—நாடியே

52 பூணவங்கு ரார்ப்பணமும் பொற்பமைத்துக் காப்பணிந்து
காணுந் துசாரோ கணஞ்செய்து—நாணிறைய

53 ஒன்றிரண்டு மூன்றோ டொருநாலைந் தாறேழும்
சென்றிடப்பி னெட்டாந் திருநாளில்—அன்றுதய

54 காலத் திருவிழாக் கண்டுவந்து வந்தருளி
மாலைவிழா வீதியுலா வந்ததற்பின்—ஞாலமெலாம்

55 போற்றுமணி மண்டபத்திற் பொன்னனையா ராடல்கண்டு
வீற்றிருந்து பொற்கோயின் மேவியே—தோற்றுருவின்

56 மன்மதனைக் கையெடுத்து மண்டலத்தோர் கொண்டாட
மென்மலர்ப்பூம் பள்ளியணை மீதணைந்து—தொன்மையகி

57 லாண்டமு மீன்றமுற்றி லாமுலையென் னம்மையொடு
காண்டகுசோ திக்கடவுள் கண்மலர்ந்து—நீண்டசடைக்

### திருமஞ்சனங்கொண்டருளுதல்.

58 கங்கைக்கு மேலாகக் காவிரிமேன் மேன்மேன்மை
தங்கத் திருமஞ் சனமாடி—மங்குலொத்த

---

49–50. தீன பிரவர்த்தகன்-ஏழைகளை நடத்துபவன். பண்ணை-இசையை. பங்கென்றது உமையை. ஆளி-ஆள்பவன்.

46–50. இப்பகுதியில், அரசன், மந்திரி, தளகர்த்தன், தாணுபதி (ஸ்தாணுபதி), ராயசத்தன், கருமாதிகாரி, காணிகன், கற்பித்தோன்(ஆசிரியன்), மகாசனன், பிரவர்த்தகன், வர்த்தகன் என்னும் பெயர்கள் தோன்றுகின்றன.

51. கஞ்சன்-பிரமன்; கஞ்சம்-தாமரை. மேடமதி-சித்திரைமாதம், திருநாள் மேவுதலும்,

52. காப்பு-ரக்ஷை. துசாரோகணம்-கொடியேற்றம்,

54. உவந்து வந்தருளி.

55. பொன்னனையார்-உருத்திரகணிகையர்.

58. கங்கைக்குமேலாக என்றது சிவபெருமான் திருமுடியிற் கங்கை இருத்தலை நினைந்து. மங்குல்-மேகம்,

௳

# மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1932-ம் வூ பிப்ரவரிமாத வரவு செலவு கணக்கு.

| விவரம் | வரவு 1932 பிப்ரவரி | | | வரவு 1931 பிப்ரவரி | | | விவரம் | செலவு 1932 பிப்ரவரி | | | செலவு 1931 பிப்ரவரி | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| I GENERAL SECTION : | | | | | | | I GENERAL SECTION : | | | | | | |
| (1) மாதச்சந்தாவகையில் வரவு... | 80 | ... | ... | | | | (1) சங்கம்மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 118 | 6 | 2 | | | |
| (2) பாங்கில் போடப்பட்டுள்ள தொகைக்கு வட்டிவகையில் வரவு ... | 625 | 4 | ... | | | | (2) சங்கக்கலாசாலை உபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 127 | ... | ... | | | |
| (3) சங்கப்பரீக்ஷைகள் சம்பந்தமாகக் கட்டணத்தொகைவரவு | 14 | ... | ... | | | | (3) சங்கக்கலாசாலை மாணவர்களுக்குப் போஷணைக்காகச் செல்லாக்கியது; ... | 70 | 1 | 2 | | | |
| (4) சங்கக்காலிவிடத்திற்கு மாத வாடகைவரவு ... | 28 | ... | ... | | | | (4) Stationery, contingencies வகையிற் செலவு ... | 1 | 10 | 6 | | | |
| (5) Miscellaneous வரவு ... | 6 | 2 | 3 | | | | (5) பாண்டியன் புத்தகசாலை உபயோகத்துக்குப் புத்தகம் வாங்கியவகையிற் செலவு. ... | 1 | 7 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 753 | 6 | 3 | 1027 | 12 | 4 | (6) தபால், தந்திவகையிற்செலவு | 15 | ... | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| II Editorial Section : | | | | | | |
| (1) 'செந்தமிழ்'ப் பத்திரிகைக்குச் சந்தாவகையில்வரவு ... | 8 | 2 | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு ... | 38 | 1 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 46 | 3 | ... | 131 | 8 | 6 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (7) ரெவினியூ தீர்வைக்காக செல்லாக்கியது ... | 3 | 13 | 10 | | | |
| (8) சங்கமாபீசு சில்லறைவேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி பைண்டிங்கூலி வகையிற் செலவு. | 13 | 8 | ... | | | |
| (9) சங்கப்பரீக்ஷைகள் சம்பந்தமாகச் செலவு ... | 60 | 10 | ... | | | |
| (10) Miscellaneous செலவு... | 5 | 2 | ... | | | |
| மொத்தம் ரூ | 416 | 10 | 8 | 456 | 11 | 4 |
| II Editorial Section: | | | | | | |
| (1) ஷை ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 35 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் அச்சிடும் சம்பந்தமாக ஸ்டேஷனெரி கண்டின்ஜன்ஸி வகையிற் செலவு. ... | 5 | 14 | ... | | | |
| (3) ஷை சம்பந்தமாக அச்சுக்கூலி பைண்டிங்கூலி வகையிற் செலவு ... | 95 | 8 | ... | | | |
| (4) தபால் தந்திவகையிற் செலவு | 2 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 138 | 6 | ... | 90 | 8 | 6 |

III PRESS SECTION :

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) அச்சுக்கூலிவகையில் வரவு. | 91 | 9 | ... | | | |
| (2) ஷை அச்சுவேலைகட்காக வாங்கிய காகிதங்கட்குக் கிரையம் வரவு ... | 1 | 8 | ... | | | |
| (3) பைண்டிங் கூலிவகையில் வரவு ... | 40 | 12 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 133 | 13 | ... | 120 | 9 | ... |

III PRESS SECTION :

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) அச்சாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 101 | 3 | 2 | | | |
| (2) ஷை ஆபீஸ் Stationery contingencies வகையிற் செலவு. | 5 | 14 | 8 | | | |
| (3) பைண்டிங் ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது .. | 29 | 2 | 6 | | | |
| (4) ஷை ஆபீஸ் Stationery Contingencies வகையிற் செலவு. | 7 | 9 | 6 | | | |
| மொத்தம் ரூ. ... | 143 | 13 | 10 | 198 | 5 | 7 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ. ... | 933 | 6 | 3 | 1279 | 13 | 10 |
| மாத ஆரம்பத்திலிருந்த கை விருப்புத்தொகை ரூ. ... | 16479 | 11 | ... | 8772 | 15 | 9 |
| ஆகமொத்தம் ரூ. ... | 17413 | 1 | 3 | 10052 | 13 | 7 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆக மொத்தம் செலவு ரூ. | 698 | 14 | 6 | 745 | 9 | 5 |
| மாதமுடிவில் மீதியிருப்புத் தொகை ரூ ... | *16714 | 2 | 9 | 9307 | 4 | 2 |
| ஆக மொத்தம் ரூ ... | 17413 | 1 | 3 | 10052 | 13 | 7 |

*By M. U. C. C. S.
Pass Bk. Rs. 5000- 0- 0
M.R.C.C. Bank
Pass Bk. Rs. 11344- 6- 7
Cash on hand Rs. 369-12- 2
16714- 2- 9

*Audited and found correct.*

**V. S. RAMASWAMI,**

AUDITOR.

10—8—1932.

**LAKSHMINARAYANAN,**

*Manager,*

MADURA TAMIL SANGAM.

7—3—1932.

உ

# மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1932-ம௵ மார்ச்சுமாத வரவு செலவு கணக்கு.

| விவரம். | வரவு 1932 மார்ச்சு | | | வரவு 1931 மார்ச்சு | | | விவரம். | செலவு 1932 மார்ச்சு | | | செலவு 1931 மார்ச்சு | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| I GENERAL SECTION: | | | | | | | I GENERAL SECTION: | | | | | | |
| (1) மாதச்சந்தா வகையில் வரவு ... | 50 | ... | ... | | | | (1) சங்கம் மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 120 | ... | ... | | | |
| (2) பாங்கில் போடப்பட்டுள்ள தொகைக்கு வட்டிவகையில் வரவு ... | 91 | 8 | ... | | | | (2) சங்கக்கலாசாலை உபாத்தியாயர்களுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 127 | ... | ... | | | |
| (3) சங்கக்காலியிடத்துக்கு மாத வாடகை வரவு ... | 28 | ... | ... | | | | (3) சங்கக்கலாசாலை மாணவர்களுக்குப் போஷணைக்காகச் செல்லாக்கியது ... | 137 | 1 | 2 | | | |
| (4) Miscellaneous வரவு ... | 7 | 5 | 9 | | | | (4) Stationery contingencies வகையிற்செலவு ... | 5 | ... | 3 | | | |
| மொத்தம் ரூ ... | 176 | 13 | 9 | 1378 | 7 | 6 | | | | | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| II EDITORIAL SECTION: | | | | | | |
| (1) சங்கத்தின் அங்கத்தினர்களிடமிருந்து சந்தாவகையில் வரவு ... | 6 | ... | ... | | | |
| (2) 'செந்தமிழ்'ப் பத்திரிகைக்குச் சந்தாவகையில் வரவு ... | 8 | ... | ... | | | |
| (3) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு ... | 106 | 7 | ... | | | |
| (4) செந்தமிழ்ப் பழைய பிரதிகள் விற்றவகையில் வரவு... | 1 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 121 | 7 | ... | 61 | 12 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (5) பாண்டியன் புத்தகசாலைக்குப் புத்தகம்வாங்கியவகையில் செலவு. | 1 | ... | ... | | | |
| (6) தபால், தந்திவகையிற் செலவு | 8 | ... | ... | | | |
| (7) சங்கமாபீசு சில்லறைவேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி, பைண்டிங்கூலி வகையிற் செலவு ... | 65 | ... | ... | | | |
| (8) சங்கப்பரீக்ஷைகள் சம்பந்தமாகச் செலவு. ... | 54 | 11 | 6 | | | |
| மொத்தம் ரூ ... | 517 | 12 | 11 | 511 | 8 | 8 |
| II EDITORIAL SECTION: | | | | | | |
| (1) ஷை ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 27 | 12 | 1 | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் அச்சிடும் சம்பந்தமாக ஸ்டேஷனெரி கண்டின்ஜன்ஸி வகையிற் செலவு. ... | 152 | 2 | 6 | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| **III. Press Section:** | | | | | | |
| (1) அச்சுக்கூலி வகையில் வரவு ... | 84 | 1 | ... | | | |
| (2) ஷை அச்சுவேலைகட்காக வாங்கிய காகிதங்கட்குக் கிரயம் வரவு ... | 1 | 13 | ... | | | |
| (3) பைண்டிங்கூலி வகையில் வரவு ... | 24 | 3 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 110 | 1 | ... | 187 | 15 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (3) ஷை புத்தகங்கள் சம்பந்தமாக அச்சுக்கூலி, பைண்டிங்கூலி வகையிற் செலவு. ... | 22 | ... | ... | | | |
| (4) தபால், தந்திவகையிற் செலவானது. ... | 17 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 218 | 14 | 7 | 96 | 6 | ... |
| **III Press Section:** | | | | | | |
| (1) அச்சாபீஸ்சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 89 | 14 | 8 | | | |
| (2) ஷை ஆபீஸ் Stationery Contingencies வகையிற் செலவு. | 5 | 1 | 3 | | | |
| (3) பைண்டிங் ஆபீஸ் சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது | 32 | 5 | 9 | | | |
| (4) ஷை ஆபீஸ் Stationery Contingencies வகையிற் செலவு | 4 | 3 | 6 | | | |
| (5) மெஷின்வகையரா ரிப்பேர் வகையிற் செலவு. ... | 10 | ... | ... | | | |
| (6) அச்சாபீஸ் தொழில்வரி செல்லாக்கியது. ... | 9 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 150 | 9 | 2 | 183 | 4 | 6 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ ... | 408 | 5 | 9 | 1628 | 2 | 6 |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத்தொகை ரூ ... | 16714 | 2 | 9 | 9307 | 4 | 2 |
| ஆகமொத்தம் ரூ ... | 17122 | 8 | 6 | 10935 | 6 | 8 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆக மொத்தம் செலவு ரூ ... | 887 | 4 | 8 | 791 | 3 | 2 |
| மாத முடிவில் மீதி இருப்புத் தொகை ரூ ... | *16235 | 3 | 10 | 10144 | 3 | 6 |
| ஆகமொத்தம் ரூ ... | 17122 | 8 | 6 | 10935 | 6 | 8 |

*By M. U. C. C. S. Pass Book Rs. 5000- 0- 0

M. R. C. C. Bank Pass Book Rs. 10994- 6- 7

Cash on hand Rs. 240-13- 3

16235- 3-10

*Audited and found correct,*

V. S. RAMASWAMI,

AUDITOR,

10—8—32.

LAKSHMINARAYANAN,

*Manager,*

MADURA TAMIL SANGAM.

5—4—1932.

# மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

## சங்கப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | யாப்பணியிலக்கணங்கள் ... ... ... | 0 | 10 | 0 |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 4 | 0 | 0 |
| 8. | தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | ஷை இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம்பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச். உரை முதலிய) ... | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 6 | 0 |
| 12. | அழகாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... ... | 0 | 5 | 0 |
| 14. | தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | 1 | 4 | 0 |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... ... | 0 | 4 | 0 |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

## செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | ஐந்திணையைம்பது உரையுடன் ... ... | 0 | 3 | 0 |
| 2. | கணூல் (5) இனியவைநாற்பது (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| 4. | புலவராற்றுப்படை ... ... ... | 0 | 3 | 0 |
| 6. | நேமிநாதம் (உரையுடன்) ... ... ... | 0 | 12 | 0 |
| *7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | | | |
| 8. | திணைமாலைநூற்றைம்பது (உரையுடன்) ... | 0 | 8 | 0 |
| *9. | அநுமானவிளக்கம் ... ... ... | 0 | 2 | 0 |
| 10. | அட்டாங்கயோகக்குறள் ... ... ... | | | |
| 12.* | பன்னிருபாட்டியல் ... ... ... | 0 | 4 | 0 |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... ... | 0 | 2 | 0 |
| 14. | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 3 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 16. | திருவாரூருலா ... ... ... | 0 | 12 | 0 |
| 17. | சுகசந்தர்சனதீபிகை ... ... ... | 0 | 4 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம்... ... ... | 0 | 3 | 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 | 2 | 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... ... ... | 0 | 8 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) . ... ... | | | |
| 22.* | திருக்கலம்பகம் (ஷை) ... ... | | | |
| 23.* | விக்கிரமசோழனுலா ... ... ... | 0 | 1 | 0 |
| 24. | குருமொழிவினவிடை ... ... | 0 | 2 | 0 |
| 25. | கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை... ... | 0 | 1 | 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் ... | 0 | 8 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை ... ... | | | |
| 28.* | சந்திராலோகம் ... ... ... | 1 | 0 | 0 |
| 29. | சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... | | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 30. | ஞானாமிர்தக்கட்டளை ... ... ... | 0 | 3 | 0 |
| 31. | பாண்டியம் ... ... ... ... | 0 | 4 | 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு ... ... ... | 0 | 8 | 0 |
| 34. | அகப்பொருள்விளக்கம் ... ... ... | 1 | 4 | 0 |
| 35.* | திருமந்திர நூறுபாட்டுக்குரை ... | | | |
| 36. | உவமானசங்கிரகம் ... ... ... | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் ... ... | 4 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 39. | பழமொழி மூலமும் பழையஉரையும் (முதல் 100 செய்.) | 1 | 0 | 0 |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் ... | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு ... ... ... | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு ... ... ... | 0 | 12 | 0 |
| 43. | மேகவிடுதூது ... ... ... | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் ... ... ... | 0 | 4 | 0 |
| 46. | இராமோதந்தம் ... ... ... | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்.) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடுந் தமிழும் ... ... ... | 0 | 6 | 0 |
| 49. | கடைவள்ளலார்காலம் ... ... ... | 0 | 6 | 0 |
| 50. | தமிழரும் ஆந்திரரும் ... ... ... | 0 | 4 | 0 |
| 51. | மதங்கசூளாமணி ... ... ... | 1 | 0 | 0 |
| 52. | கூடற்புராணம் ... ... ... | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் ... ... ... | 0 | 6 | 0 |
| | ஷை ஆங்கிலத்தில் ... ... ... | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்க நிகண்டு ... ... | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் ... | 0 | 12 | 0 |
| 56. | பாப்பாவினம் ... ... ... | 0 | 10 | 0 |
| 57. | மதுரைமும்மணிக்கோவை ... ... ... | 0 | 5 | 0 |
| 58. | பழனிப் பிள்ளைத்தமிழ் ... ... ... | 0 | 3 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:-1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டு வெளியாகிவரும் "செந்தமிழ்"ப் பத்திரிகைக்கு வருஷச் சந்தா ரூ 4. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச் சந்தா ரூ 4—8—0. இதுவரை 29 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டு செய்யப்பெறாததொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—0—0-வீதமும், பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—12—0 வீதமும் விற்கப்பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி—இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லக்ஷ்மீநாராயணையர், மானேஜர்.